# பழனியாண்டவர்
# மயில்விடு தூது
# தடாகம்
# தவத்திரு திருமுடி சுவாமிகள்
# நெஞ்சுவிடு தூது

நூலாசிரியர்
**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்
**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**
மேனாள் முதல்வர்,
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.



சிரவைக் கௌமார சபை வெளியீடு



உ

# பழனியாண்டவர் மயில்விடு தூது

# தடாகம் ஸ்ரீமத் திருமுடி சுவாமிகள் நெஞ்சுவிடு தூது


நூலாசிரியர்

**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்

**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**

மேனாள் முதல்வர்,

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.





**வெளியீடு**

**சிரவைக் கௌமார சபை**

**சிரவணபுரம் கௌமார மடாலயம்**

**சின்னவேடம்பட்டி, கோவை - 641 049**

சிரவையாதீனக் கஜபூசை வெள்ளிவிழா
நினைவு வெளியீடு

வெளியீட்டு எண் : 314

நூல் பெயர் : பழனியாண்டவர் மயில்விடு தூது
தடாகம் ஸ்ரீமத் திருமுடி சுவாமிகள்
நெஞ்சுவிடு தூது

நூலாசிரியர் : கவியரசு கு. நடேச கவுண்டர்

பதிப்பாசிரியர் : முனைவர். கோ.ந.முத்துக்குமாரசாமி

வெளியீட்டு நாள் : 22.03.2012

படிகள் : 300

விலை : ரூ. 30.00

அச்சிட்டோர் : சௌமி அச்சகம்
1E, துடியலூர் சாலை,
சரவணம்பட்டி,
கோவை - 641 035.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம் : தலைவர்
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி,
கோவை - 641 049.
தொலைபேசி : 0422-2666370



## நூலாசிரியர் பற்றி...

இந்நூலாசிரியர் கோவை, கவியரசு கு. நடேச கவுண்டர் அவர்கள் திரு. குமாரசாமிக் கவுண்டர், திருமதி அங்கம்மாள் ஆகிய தம்பதியருக்கு மூத்தமகவாக 1901ஆம் ஆண்டு பங்குனி உத்திர நன்னாளில் பிறந்தார். பங்குனி உத்திரத்தில் பிறந்தமையால் நடேசன் எனப் பெயரிட்டுப் பெற்றோர் மகிழ்ந்தனர்.

இளவயதிலேயே தந்தையை இழந்த இவர் தம் தாய்மாமனின் தையல் நிலையத்தில் காஜாத் தொளை எடுக்கும் சிறுவனாக வாழ்க்கையைத் தொடங்கினார். முற்பிறவிப் புண்ணியம் இருந்தமையால் வேட்டைகாரன்புதூரில் சமாதி கொண்டிருக்கும் தவத்திரு அழுக்குச் சாமிகளின் திருக்கண்ணோக்கம் இவர்பால் விழுந்தது. அழுக்குச்சாமிகள் இவருக்குத் தமிழின்பம், சிவபத்தி, திருமுறைப்பயன் ஆகியவற்றை ஊட்டினார்.

பள்ளபாளையம் வையாபுரிப்பிள்ளை என்னும் சான்றோர், சிறுவன் நடேசனுக்கு இயல்பாகவே இருந்த தமிழறிவினை இலக்கணக்கல்வி அளித்து மேலும் வளர்த்தார். பேரூர் சாந்தலிங்கர் திருமடத்தில் தமிழறிஞர்கள் சமயச் சான்றோர்கள் குழுமும் சத்வித்யாசன்மார்க்க சங்கத்தை அறிமுகம் செய்து வைத்தார். கோவை நீதிமன்றத்தில் சிரஸ்தாராகப் பணியாற்றிய பிள்ளை மூலம் வழக்கறிஞர் சிலரிடம் எழுத்தராகப் பணிபுரியும் வாய்ப்பு நடேசனாருக்குக் கிட்டியது. நடேசனார் மதுரைத்தமிழ்ச்சங்கம் நடத்தும் பாலபண்டித் தேர்விலும் பின்னர், சென்னைப் பல்கலைக்கழகப் பண்டிதர் தேர்விலும் முதல்வகுப்பில் தேறி நகராண்மை உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியரானார்.

சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் வழியே சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் குருமூர்த்தியும் கொங்குக் கச்சியப்பருமாகிய தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் அன்புக்கு உரியரானார். சுவாமிகள் இவருக்கு வித்யாகுருவாக விளங்கினார். நடேசனார் சந்தத்தமிழ்க் கவியாக விளக்கம் பெற்றார். பின் நாளில், கோவைத் தமிழ்ச்சங்கத்தாரால் 'கவியரசு' எனும் பட்டம் அளிக்கப் பெற்றார்.

நகராண்மைப் பள்ளியின் ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியில் ஆசிரியராகவும் முதல்வராகவும் சிலகாலம் பணியாற்றினார். மதுரையாதீனம் தவத்திரு சோமசுந்தரப் பரமாச்சாரிய சுவாமிகள், தொண்டைமண்டலவாதீனம் சீலத்திரு ஞானப்பிரகாச சுவாமிகள் ஆகிய பெரியோருடன் நெருங்கிய நட்புக்குரியராக விளங்கினார்.

1972ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தன்று அம்பலவாணர் திருவடி அடையப்பெற்றார்.



# ஆசியுரை

**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்**
**சிரவையாதீன கர்த்தர்**

கவியரசு திருமிகு. கு. நடேச கவுண்டர் ஐயா அவர்கள் தன் சொந்த முயற்சியிலேயே தமிழ் கற்று நல்ல போதாசிரியராக, கவிஞராக, ஆய்வாளராக உயர்ந்து தமிழ்ப்பணி புரிந்த தகைசான்ற சான்றோர் ஆவார். அவர் இறையன்பில் இணையற்றவராகத் தவறாத சிவபூசைச் செல்வராக விளங்கினார். சற்றும் வாய்ப்பற்ற நிலையில் மிகக் கஷ்டப்பட்டு வடமொழியைப் பயின்று அம்மொழியிலும் புலமை பெற்றார். தம்மைப் பொறுத்தவரையில் சைவ சித்தாந்தக் கொள்கையில் அசைக்கமுடியாமல் ஆழங்கால் பட்டிருந்தும், சிவபெருமானின் அடியவர்களாக விளங்கிய அத்துவிதம் முதலிய பிறசமய ஆசிரியர்களின் வடமொழி நூல்களையும் மிகுந்த ஈடுபாட்டோடு மூலத்திற்கு இணையாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். கவியரசு அவர்களின் நியாயக் களஞ்சியமும், அப்பர் தேவாரத் திறனாய்வும் தமிழ்ச்சைவ இலக்கிய ஆய்விற்கு மிகச் சிறந்த கருவி நூல்களாகும்.

திரு. நடேசகவுண்டர் ஐயா அவர்கள் நம் ஆதீனத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானங்களிடம் தமிழ்நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்டார். ஆசிரியரின் படைப்புக்கு மாணவர் சிறப்புப்பாயிரம் அளித்தல் என்னும் மரபு பற்றிச் சுவாமிகளின் பல நூல்களுக்குக் கவியரசு சாற்றுக்கவி அளித்துள்ளார். அவ்வாறே திரு. கவுண்டர் ஐயா அவர்களின் படைப்புகளுக்கும் சுவாமிகள் சாற்றுக்கவிகள் அருளியுள்ளார். தம்பால் தமிழ்கற்க வந்த சிலரைச் சுவாமிகள் கவியரசு அவர்களிடம் ஆற்றுப்படுத்தினார் என்பதிலிருந்தே அவரைச் சுவாமிகள் எந்த அளவு மதித்திருந்தார் என்பதை அறியலாம்.

கவியரசு அவர்களின் படைப்புகளைத் தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகள், மொழி பெயர்ப்புகள், இசைப் பாடல்கள், ஆய்வு நூல்கள் உரைகள் என வகைப்படுத்தலாம். சிற்றிலக்கியங்களுள் எட்டுப்

பிள்ளைத் தமிழ்கள், ஒரு கலம்பகம், இரு தூதுகள், ஒரு தாலாட்டு, ஒரு திருப்பள்ளியெழுச்சி, சில பதிகங்கள் முதலியன அடங்கும்.

கவியரசு அவர்கள் தூது என்னும் வகையில் இரு பிரபந்தங்களை இயற்றியுள்ளார். ஒன்று பழனியாண்டவர் மயில் விடு தூது; மற்றொன்று தடாகம் தவத்திரு திருமுடி சுவாமிகள் நெஞ்சுவிடுதூது. பொதுவாக தூது இலக்கியம் என்றால் இலக்கிய ஆர்வலர்களுக்குக் காதலி ஒருத்தி தன் காதலன்பால் தன் பரிவாற்றாமையைக் கூறி மாலை வாங்கி வரச் சொல்லும் அகப்பொருள் தூதுதான் நினைவு வரும். கவியரசு அவர்களின் இரு தூதுகளும் பத்திப் பொருண்மை கொண்டவை.

ஞானதேசிகர்பால் தம் அடிமைத்திறத்தை வெளிப்படுத்தும் நெஞ்சுவிடு தூது நூல்கள் தமிழில் பரலவலாகக் காணப்படுகின்றன. மெய்கண்ட நூல்களுள் ஒன்றாகப்புகழ்பெற்ற உமாபதி சிவாசாரியாரின் மறைஞானசம்பந்தர் நெஞ்சுவிடுதூது கூட அகப்பொருள் வாய்ப்பாட்டில் அமைந்த ஞானநூல்.

கவியரசு அவர்களின் மயில்விடு தூது பழனியாண்டவரைத் தரிசித்த அன்பன் ஒருவன் மறுமுறை காண விழைவதைப் பாடுபொருளாகக் கொண்டது. நெஞ்சுவிடு தூதின் பொருண்மையும் ஏறக்குறைய அதுதான். இரண்டாவது குருநாதர்பால் தூதுவிடுதல் என்ற அளவில் மட்டும் வேறுபடுகிறது.

கவியரசு அவர்களின் எட்டுப் பிள்ளைத் தமிழ் நூல்கள் இப்போது பதிப்பாகின்றன. இந்நூல்கள் திருமிகு. நடேசக்கவுண்டர் ஐயா அவர்களின் அருந்தவப் புதல்வி திருமதி. ந. அங்கயற்கண்ணி அவர்களின் புண்ணியப் பொருளுதவியுடன் கவியரசு அவர்களின் மைந்தரும், பேரூர்த் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியின் மேனாள் முதல்வருமாகிய பாராட்டுக்குரிய பேராசிரியர் முனைவர் கோ.ந. முத்துக் குமாரசாமி அவர்களின் பதிப்பாக வெளியிடப்படுகின்றன. போற்றுதலுக்குரிய சிரவையாதீனம் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் அவர்களின் செயற்கரிய செயலாகிய கஜபூசையின் வெள்ளிவிழா நினைவு மலர்களாக இவை மலர்வது மிகப் பொருத்தமானது. தமிழ்மொழியின் ஆடி அசலங்களை நன்கு அறிந்துகொள்ள இத்தகைய நூல்களை அனைவரும் படித்துப் பார்க்க வேண்டும் என விழைகிறோம்.

# அணிந்துரை



முனைவர். ந. இரா. சென்னியப்பனார்,
தலைவர், மணிவாசகர் அருட்பணி மன்றம்,
பேரூர், கோவை - 10.

புவியரசு பங்கயத்தான் புரந்தான் போற்றுகின்ற
புவிபரகம் உமைபாகன் புகழ்பாடும் திருமுறையின்
செவிபரசும் இசையுணர்ந்தோன் செழுந்தமிழின் திறமுணர்ந்தோன்
கவியரசு நடேசனார் கழலடியைக் கருத்திருத்துவாம் 1

மங்கையர்க் கரசிமேல் மாண்பான பிள்ளைத்தமிழ்
கங்கையற் குபதேசி கனிமுருகன் பிள்ளைத்தமிழ்
தங்கையன் எட்டிக்குடி தகவான பிள்ளைத்தமிழ்
அங்கையன் பழனியாண்டி அணிமயில் விடுதூது 2

திருநிலை நாயகி திறம்பேசும் பிள்ளைத்தமிழ்
பெருநிலை கந்தசாமி பேர்போற்றும் பிள்ளைத்தமிழ்
ஒருநிலை திருமுடியார் உயர்நெஞ்சு விடுதூது
தருநிலை பேரூரின் தரமான கலம்பகம் 3

பகுதியாய்த் துணைமாலை பாங்கான பிள்ளைத்தமிழ்
தகுதியாய்ப் படைத்தளித்த தண்டமிழின் கவியரசு
தொகுதியாய் வெளிக்கொணரும் தோன்றல் குமரகுருபரர்
மிகுதியாய் இவர்பாதம் மேல்வைத்து வணங்குதுமே 4

சிரவைநகர்க் கந்தசாமி சீரடியைத் துதித்திடுவோன்
அரவையணி பெம்மானின் அடிவணங்கும் பெருந்தவத்தோன்
இரவைநிகர் மலமோட்டும் இனியதமிழ்க் கவியரசு
கரவைமனம் இல்லாத கற்றறிந்த பெரும்புலவன் 5

கோவைநகர்க் கவியரசு கொண்டகொள்கை மாறாதான்
ஆவைநிகர் அழுக்குசாமி அருந்தவத்துச் சாதுசாமி
காவைநிகர் இராமானந் தர்கழலடி கருத்துறுவோன்
ஏவைநிகர் விழியுடைய எம்மன்னை அருள்பெற்றோன் 6



பொன்னிறம் தரும்சைவ வெண்ணீறு மங்காது
பூசுககண் மணிகள் அணிக
புலைகொலை மயக்கம் நீர்ஒழிக மன்னுயிரையுன்
போலன்பு கொடுபோற்றுக
மன்னுசிவ பத்தரைப் பாகவதர் தம்மையரன்
மாலென மதிக்கநீர்தூய்
மலரிட்டு வழிபாடு செய்தபின்னே யுணவு
வாயிகுக, தெய்வநாமம்
உன்னிடுக, எப்போதும் உருவவழி பாடுசெயல்
ஒழியற்க தீயர்கும்பல்
உறலொழிக! இறைவனருள் உனைதேடி வரும்...
(தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்)

என்று குருநாதர் கந்தசாமி சுவாமிகள் கூறியதாகக்கவியரசு பாடியுள்ளார்.

1. சைவ வெண்ணீறு மங்காமல் பூசுதல், 2. உருத்திராக்கமணி அணிதல், 3. புலை, கொலை, மது முதலியவற்றை நீக்குதல், 4.மன்னுயிரைத் தன்னுயிர் போல் போற்றல், 5. சிவனடியார்களைச் சிவனாகவே மதித்தும் திருமாலடியார்களைத் திருமாலெனவே மதித்தும் வரவேற்று மலரிட்டு வழிபாடு செய்தபின் உணவு உண்ணுதல். 6. தெய் நாமமாகிய மந்திரத்தை மறவாது கணித்தல். 7. சிவபூசை செய்தல், 8. சிற்றினம் சேராதிருத்தல் ஆகியவற்றை மேற்கொண்டால் திருவருள் தேடி வரும் என்று சுவாமிகள் உபதேசித்ததாகக் கூறியுள்ளார். கவியரசு வாழ்க்கையில் இவற்றை முற்றிலுமாகப் பின்பற்றி வாழ்ந்தவராவர்.

கவியரசு தாம் பாடிய நூல்களில் தவத்திரு சாதுசாமி, தவத்திரு கந்தசாமி சுவாமி ஆகியோரை உரியவிடங்களில் புகழ்ந்து பாராட்டியுள்ளார். பழனியாண்டவர் மயில் விடுதூதில் விநாயகர் காப்பை அடுத்து "தஞ்சமென அஞ்சலெனும் சாதுகுருநாதன்" என்று சற்குருநாதர் வணக்கத்தில் போற்றிப் புகழ்ந்துள்ளார். "எமது தாழ்குடியைக் கொத்தடிமை கொண்ட குருசாது" என் நூலினுள்ளும் குறிப்பிட்டுள்ளார். தவத்திரு சாதுசாமிகள் மீது நவமணி மாலை என்று ஒரு தனிப்பனுவலையும் பாடியுள்ளார். மயில்விடுதூதில் வித்யா குரு துதியில் கந்தச்சுவாமி கருணாகரச்சாமி, கந்தச் சுவாமி தமப்பச்சாமி என்று கருத்துரைத்தார்.

தவத்திரு கந்தசாமி சுவாமி பிள்ளைத்தமிழில், அம்மைக் கவிஞன் எங்கள் குரு அருளார் கவி சற்குணமேரு ஆன கந்தசாமி என்றும் "எழுபிறப்பும் வழியடியேம், இயற்றும் தவத்தால் இங்கெய்தி, இணையிலாடல் புரிந்தருளும் எந்தாய்" என்றும் "குருவே கந்தசாமிக்குணக் குன்றே" என்றும் "சிரவைக் கந்த தேசிகனே" என்றும் "அனுபூதியருள் குருகந்தசாமி" என்றும் பலவாறாகப் பாடியுள்ளார். "செய சுந்தரச்சாமி நினது வழிவாழவே" என்று வாழ்த்தியும் உள்ளார்.

கவியரசு அவர்கள் பாராட்டிப் புகழ்ந்த மற்றொரு துறவியார் தவத்திரு திருமுடி சுவாமிகள் ஆவார். அவர்மீது நெஞ்சு விடுதூது என்ற எளிய பனுவலைப் பாடியுள்ளார். கவியரசு அவர்கள் பாடிய முதல் இலக்கியம் இதுவே.

"பிறவிப் பெருங்கடலை நீந்தலெனும் பெட்பே
உறவிக் குவலயத்தே உண்மைத் - துறவித்தோல்
தோணியாம் சற்குரவன் தோன்றுவது எக்காலம் அவற்
காணிய எந்நாள்"

என்று ஏங்கிய கவியரசுக்கு

"அரிய புலன் ஐந்தும் அவித்தார் குணமாம்
பெரிய மலைமேல் நின்று பெற்றியார் - பெரிய
சடைமுடி சூடிய தவராசர் ஆவார்"

ஆகிய ஞானியைக் கண்டார்.

"திருவடி எம்சென்னிமிசைச் சூட்டியருளும்
திருமுடி என்றேத்திச் சிரமேல் - கரமலர்கள் சூடினார்"

"மாற்ற இயலா மனத்திருளை மாற்றியொளி
ஏற்றும் பதத்தாமரை இணையும் - நோற்ற
தவப்பயனால் கண்டேன்"

என்று திருமுடி சுவாமிகளில் பெருமையினைத் தம் முடிமேல் வைத்துப் பாராட்டியுள்ளார்.

1. தவத்திரு திருமுடி சுவாமிகள், 2. தவத்திரு கந்தசாமி சுவாமிகள், 3. தவத்திரு சாது சுவாமிகள் ஆகிய முப்பெருந்துறவியர்களை மட்டும் பாடியவர் கவியரசு ஆவார்.

"மானிடரைப் பாடாத வண்ணம் பணியடியனேன் இடரைப்
பாட்டை யொழித்து ஏல்"

என்று பேரூர்க் கலம்பகத்தில் பாடியுள்ளார்.

"நாக்கொண்டு மானிடம் பாடேன்" என்றும் "என் நாவில் இன் கவியான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்" என்றும் "மானிடரைப் பாடாமல் மாதவனை ஏத்துமின்" என்றும் ஆழ்வார்கள் கூறியதைப் போல் மானிடம் பாடாத மாக்கவிஞர் கவியரசு.

"வம்பறா வரிவண்டு மணம் நாறமலரும்
மதுமலர் நல் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன்" போலவும்
"பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்ற நம்பியாரூரைப் போலவும்

"தோகைமேல் உலவும் கந்தன், சுடர்க் கரத்திருக்கும் வெற்றி
வாகையே தமக்கு வேலை வணங்குவாதெமக்கு வேலை"

என்ற சைவ எல்லப்ப நாவலர் போலவும் வாழ்ந்த பெருங்கவிஞர் கவியரசு.

சங்க இலக்கியங்களில் "பொதினி" என்று வழங்கு மலையே இன்றைய பழனியாகும்.

"சிந்தைமகிழ் புலவோர்கள் வந்து
வந்தனைசெய் சரணார விந்த
செந்தமிழி லுனையே வணங்கு குருநாதர்
தென்றல்வரை முநிநாதரன்று
கும்பிடந லருளேபொழிந்த
தென்பழனி மலைமே லுகந்த பெருமாளே"

என்று அருணகிரிநாதரால் புகழ்ந்து பாடப் பெற்ற பழனியாண்டவர் மீது கவியரசு அவர்களால் பாடப்பெற்றது மயில்விடுதூதாகும். பாடாண் திணைக் கைக்கிளை என்ற மரபைச் சார்ந்தது.

"சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇ
செய்யா மரபின் தொழிற்படுத்து அடக்கியும்

அவரவர் உறுபிணி தமபோல் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ... உரியபாற் கிளவி!"

என்றதொல்காப்பியப் பகுதியை ஒட்டிச் சொல்லாததைச் சொல்வது போலவும் செய்யாததைச் செய்வது போலவும் பாடப் பெறும் இலக்கிய வகையாகும். தூது இலக்கியங்கள் கலிவெண்பால் பாடப்பெறும். மயில்விடுதூது 397 கண்ணிகளாலானது. தூது இலக்கியங்களில் இன்பச்சுவை மிக்கிருக்கும். மயில்விடுதூதில் காமச்சுவை சற்றும் இல்லாமல் தொண்டன் ஒருவன் பழனியாண்டவனைக் கண்டு பக்தியால் பணிந்து மயிலைத் தூது விடுவதாகப் பாடுபொருளைக் கவியரசு அமைத்துள்ளார்கள்.

மயில்விடுதூதின் தொடக்கப்பகுதி குமரகுருபரர் கந்தர்கலிவெண்பாவில் கூறும் இறைவனின் உண்மை நிலை (சொரூபலக்கணம்) பொது நிலை (தடத்தலக்கணம்) ஆகியவற்றைப் போன்று அமைந்துள்ளது. பலதொடர்கள் கலிவெண்பாவில் வருவதையே கையாண்டுள்ளார்.

"வந்த, குறியும், குணமும் ஒருகோலமும் அற்று எங்கும்
செறியும் பரமசிவமாய்" என்று குமரகுருபரர் பாடியதைச்
சற்றுமாற்றி,
"குறியும் குணமுமிலாக் கோமான் - நெறியால்
அறிவை யறியும் அறிவரகத்துள்
செறியும் பரம சிவமாய்"

என்று கவியரசு பாடியுள்ளார்.

"உருவும் அருவும் உருஅருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய்"

என்பது கலிவெண்பாத் தொடர்.

"உருவும் அருவும் உருஅருவும் ஆகப்
பருவ வடிவங்கொள் பண்பான்"

என்பது மயில் விடுதூதுத் தொடர்.

இறைவன் வடிவங்கள் உருவத்திருமேனி, அருவதிருமேனி, அருவுருவத் திருமேனி என்று மூவகைப்படும். இறைவன் வடிவங்

கொள்வது தன் பொருட்டோ பிறர் பொருட்டோ என்று ஐயம் உண்டாகும். இறைவன் அருவத்தையும் கடந்து நிற்கும் நுண்ணியன் ஆகையால் வடிவங்கொள்ளாமலேயே மாயையைச் செயல்படுத்தும் ஆற்றல் உடையவன். அவ்வாறு செய்யின் உயிர்கள் பயனடையா. உயிர்கள் இறைவனை அறிந்து அடைதற்பொருட்டு மாயையைச் செயல்படுத்தும்போது செயலுக்கேற்ற வடிவங்களைக் கொள்வான். வடிவங்கள் உண்டு எனவே பெயர்களும் அவற்றிற்குரிய தொழில்களும் தாமே உண்டாம்.

ஒருகுறியும் கோலமும் தொழிலும் இல்லாத நிலை உண்மை இயல்பு (சொரூபலக்கணம்) ஆகும். உயிர்கள் பயன் பெறும் பொருட்டு பல வித வடிவங்களை கொள்வது பொது இயல்பு (தடத்தலக்கணம்) ஆகும்.

அருவத்திருமேனி கண்ணுக்குப் புலனாகாதது. ஞானியர்களால் ஞானத்தில் உணர்ந்து கொள்வது. உருவத்திருமேனி கண்ணுக்குப் புலனாகும். அருவுருவம் ஒளி வடிவானது. ஒரு காற்புலனாகியும் ஒருகால் புலனாகாமலும் நிற்கும். புலனாகும்போது பிழம்பாக இருக்கும். இதுவே இலிங்கத்திருமேனி எனப்படும்.

"அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்
உருவும் உடையான் உளன்" (திருவருட்பயன்)

1. அருவும் உடையான், 2. உருவும் உடையான், 3. அருவுருவம் உடையான்.

"உருமேனி தரித்துக் கொண்டது என்றலும் உருவுஇறந்த
அருமேனி அதுவும் கண்டோம் அருவுருவானபோது
திருமேனி உபயம் பெற்றோம், செப்பிய மூன்றும் நந்தம்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவுதானே"
(சிவஞானசித்தியார்)

அருவாய், உருவாய், அருவுருவாய் உள்ள இறைவன் உயிரினங்கள் பயன்படும் பொருட்டுக் கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும், உயிர்க்குயிர் ஆதல் தன்மையால் உடனாயும் இருப்பான். இந்நிலை அத்துவிதம் எனப்படும்.

"உலகுயிர்கள் யாவுமாய், வேறாய், உடனாய்க்
கலவிக் கலவாத காட்சி"

என்று கவியரசு பாடியுள்ளார்.

சங்கார காரணனாகிய முதல்வன் கலப்பினால் உடலின் உயிர் போல அவ்வான்மாக்களேயாய்ப் பொருள் தன்மையால் கண்ணின் அருக்கன் போல அவற்றின் வேறுமாய், உயிர்க்குயிராதல் தன்மையானே கண்ணொளியின் ஆன்ம போதம் போல உடனுமாய்... நிற்பன் (சிவஞானமாபாடியம்)

"ஆக்கை இளமை அழியாத தெய்வமணம்
பூக்கும் அழியாப் புகழ்முருகன்"

என்று முருகன் இளமை அழகைப் பாடியுள்ளார். "மணங்கமழ் தெய்வத்து இளநலம்" என்பது நக்கீரரின் வாக்கு. முருகன் அல்லது அழகு என்று ஒருநூலையே திரு.வி.க எழுதியுள்ளார். ஆறுமுகப் பரமன் அமர் படைவீடுகளைப் பாடும் கவியரசு திருவேரகத்தை, "திருமறையோர், நீரகத்தால் ஆறெழுத்து நெஞ்சமுத்தி அஞ்சலிசெய் ஏரகம்" என்று குறிப்பிட்டுள்ளார். இன்று ஆறெழுத்து மந்திரத்தை "சரவணபவ" என்றே அனைவரும் குறிப்பிடுகின்றனர்.

"ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி" என்ற திருமுருகாற்றுப்படைத் தொடருக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியார் "நமக்குமாராய" என்றே குறிப்பிட்டுள்ளார்.

"நாதா! குமரா நம என்று அரனார்
ஓதாய் என நின்று ஓதியது"

என்று அருணகிரிநாதரும் அனுபூதியில் குறிப்பிட்டுள்ளார்.

"குமராநம என்று கூறினார் ஓர்கால்
அமரா வதியாள்வ ரன்றி - எமராசன்
கைபுகுதார், போரூரன் கழல்புகுவார், தாய் உதரம்
பைபுகுதார், சேரார் பவம்"

என்று திருப்போரூர்ச்சிதம்பர சுவாமிகளும் குறிப்பிட்டுள்ளார். கவியரசு அவர்கள் ஆறெழுத்து மந்திரத்தை மயில்விடுதூதில்

பலவிடங்களிலும் பிறநூல்களில் ஆங்காங்கும் பாடியுள்ளார். கவியரசு அவர்கள் பழனித்தலம் உள்ள வைகாவூர் நாட்டைப் பற்றிப் பாடும் போது சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி நாயனாருடன் நட்புக் கொண்டார், சுந்தரர் முதலை வாய்ப்பிள்ளை மீட்டார், அவர் கயிலை செல்லும்போது சேரமான் குதிரை மேலேறிக் கயிலை சென்றார் கயிலையில் தெய்வ உலாப் பாடினார். அச்சேரனின் அழகிய கொங்கு நாட்டு வைகாவூர் நாடு என்ற செய்தியை

"முதலைவாய்ப் பாலனுயிர் மீட்டமுனைப்பாடி
முதலை வாய்ப்பு அன்பாக்கி மூவா - முதலார்வாழ்
அண்ணற் கயிலைக்கு அவ்வாரூர ரோடு ஆடற்
பண்ணற் பரிமேற் படர்ந்துசுவை - உண்ணமுதல்
தெய்வ உலா ஓதுபுகழ்ச் சேரன் அணி கொங்கில்
நய்தலிலா வைகாவூர் நாடதனில்"

என்று பாடியுள்ளார்.

முதலைவாய்ப் பாலன் உயிர்மீட்டவர் சுந்தரர், அவர் திருமுனைப்பாடி நாட்டின் முதல்வர். முதல்வர் என்பதை முதல் என்று குறிப்பிடுவது மரபு. "தம் முதல் குருவுமாகி" (சிவஞானபோதம்) முதல் - முதல்வன். முனைப்பாடி முதலை (முதல்வனை) வாய்ப்பு அன்பாக்கி - திருமுனைப்பாடி நாட்டு முதல்வராகிய சுந்தரரைக்காண வாய்ப்பும் அன்பும் ஆக்கியவர் சேரமான். ஆக்கி - ஒடுங்கி என்றாற்போல் பெயர்.

"ஆதரம் பயிலாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவரோமுட முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயிலையிலேகி
ஆதியந்த உலா ஆசு பாடிய
சேரர் கொங்குவை காசூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே"

என்ற அருணகிரிநாதர் வாக்கே கவியரசுக்கு அடிப்படை ஆதரமாயிற்று.

திருவாவினன்குடியே செவ்வேட் பிரானுக்கு உவகையுடைய நகர் என்று ஆன்றோர் பலரும் மொழியர்கேட்டு உள்ளத்தில்

தோன்றாத பேருவகை தொண்டனுக்குத் தோன்றியது.

"ஆன்ற பிறப்பு, எண்ணிலவை தம்மிலியற்றும் தவப்பயனும்
நண்ணியதால் ஊக்கம் நனியுந்தத் - திண்ணியபேர்
ஆவலொடு அப்பதியை அண்ணினேன்"

எண்ணில்லா பிறப்பு முன்பு எடுத்தேன், அப்பிறப்புக்களில் செய்த புண்ணியத்தால் ஊக்கம் மிகுதியாகச் செலுத்த ஆவலுடன் ஆவினன்குடியை அடைந்தேன்.

"ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும்"

என்பது சிவஞானபோதம் எட்டாம் நூற்பா முதலதிகரண மேற்கோள். ஊக்கம் உந்த திருவாவினன் குடியைத் தொண்டன் அடைந்தான்.

"உவகை நெஞ்சத்துப் படர் பேரூக்கம் பிடர் பிடித்து உந்த
எழுந்தனன் இம்மென"

என்பது கச்சியப்ப முனிவர் வாக்கு.

ஆவினன் குடியை அடுத்த சரவணப் பொய்கையில் நீராடி நீறணிந்து ஐந்து தூய்மையுடன் பூசை செய்து விநாயகப் பெருமானைப் பணிந்தார். துங்கக்கரிமுகத்துத் தூமணியைத் தாள் பணிந்து சங்கத்தமிழ் வளர்த்த சண்முகனைச் சேவித்தார்.

"பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா"

என்ற தொடர் துங்கக் கரிமுகத்துத் தூமணிலயத் தாள் பணிந்து என்று பொன்னே போல் போற்றப் பெற்றுள்ளது.

சங்கத்தமிழ் வளர்த்த சண்முகனைச் சேவித்தபின் சாதுசாமிகளின் நந்தியாச்சிரமம் அடைந்தார். அங்கு சரியை, கிரியை செய்கின்ற தொண்ட சிவயோகர் ஞானியர், மோனியர், சித்தாந்தர், வேதாந்தர் முதலியோரைக் கண்டார். தேவார முதலிய திருமுறைகளை நாவாரப்பாடுவோர், அருணகிரிநாதரின் திருப்புகழ், திருவகுப்பு அலங்காரம், அனுபூதி ஓதுவோர் ஆகியோரைப் பார்த்தார். வடமொழித் தோத்திரங்களைப் பாடுவோர் பலர் இருந்தனர். ஆறு சுவை, நால்வகை உணவு சமைப்போர் உணவு

உண்ண அழைப்போர் முதலியோர்களுடன் சாது சாமிகள் பத்தர்களுக்கு எவ்விதக் குறையும் வாராமல் பார்த்துக் கொண்டார். குருநாதர் சாது சாமிகளும் அனுமதி பெற்றுச் சிவ மலையைப் பார்த்தார். இடும்பன் சிவகிரி, சத்திகிரிகளைக் காவடியில் கொண்டு வந்து பழனியில் இறக்கி வைத்தான். பசியாற்றிய பின் அக்காவடியை எடுக்க முயன்ற போது மலைமீது சிறுவர் இருப்பதை அறிந்து போரிட்டழிந்தான். ஈசன் மகனால் இடும்பன் அருள் பெற்றான்.

"செஞ்சொற் புலவர் கவிசேர்ந்தமலை - தஞ்சமென
வந்தார் விரும்பும் வரங்களனைவையுமுடன்
இந்தா எனவளிக்கும் இன்ப மலை"யாக அம்மலையாயிற்று.

கங்கை நதிக்கரையிலுள்ள காசியிலும் சிறந்த தலம் பழனி, அருணகிரிநாதர்

"ஒருபொழுதும் இருசரணம் நேசத்தே வைத் துணரேனே
உனது பழநிமலையெனும் ஊரைச் சேவித்தறியேனே"

என்று பாடிப்புகழ்ந்த மலை. அம்மலையின் அடிவரையைத் தொண்டர் சேர்ந்தார். மொட்டையிட்டு, நீறணிந்து தோளில் காவடியை வைத்து முருகா! முருகா! ஆறுமுகா! அறுமுகா! பழனியாண்டவா! அரகரா... என்று கூறிச் செல்வோர் முன்பு வழிபட்டுப் பல வித நன்மைகளைப் பெற்றோர் ஆகியோரைக் கண்டார். மலையேறி வழியில் இடும்பனை வழிபட்டு உச்சியடைந்து கோயில் வலம் வந்து கொடிமரத்தின் முன் தெண்டனிட்டுக் கோயில் வாயில் உள் நுழைந்தார். குமரன் கோயில் சிறப்புக்களையும், திருவுருவிற்கு நடைபெற்ற அபிடேகத்தையும் கண்டு மகிழ்ந்து தண்டபாணி கொண்ட மெய்க் கோலத்தைக் கண்டார்.

"பல்லுயிரையும் வாட்டும் பகையான மும்மலத்தைக்
கொல்லுதற்குக் கொண்ட போர்க்கோலம்போல் - கல்லாடை
சிற்றிடையில் சேர்த்து"

அணிந்ததைக் கண்டார். பூசனை நிறைவெய்தியதும் முருகப்பெருமான் உலாக்காட்சிதந்தான். "கோலக் கலாபக் குதிரையின் மேலமர்ந்து" உலாவந்தான். "ஆடும்பரி" என்று அருணகிரிநாதர் பாடியதைக் கவியரசு இவ்வாறு பாடியுள்ளார். தசாங்கச் சிறப்பு, கோபப்பிரசாதங்களை விரிவாகப் பாடியுள்ளார்.

"பழனியாண்டவன் ஆனந்தமாகத் திருவுலாவரக் கண்டேன்
உடலை மறந்தேன், உயிரை மறந்தேன்
நடலை மனத்தையும் நானென் - றிடலையும்
எல்லா மறந்தேன் மற்றிந்த அநுபவம்
வல்லே மறைத்து வருந்தினேன்"

மணிவாசகப் பெருமானுக்குக் குருந்தின் கீழ் அருள் செய்த குருநாதர் மறைந்தபின் தோன்றிய அநுபநிலையைப் போன்றது இவ்வநுபவம். தொண்டன் தன் துயரைத் தோகைக்கு உரைத்தான்.

"தமிழால், வைதவரை வாழ்த்தும் பெரும் வள்ளல்" என்றுணர்ந்தார். "முத்தமிழால் வைதாரையும் அங்குவாழ வைப்பான்" என்ற அலங்காரக் கருத்தாகும். "ஒருகால் முருகா என்று ஓதுவார் சென்னி இருகாலும் வைத்தருள்வான்" என்று எண்ணி மயிலைத்தூது விடத்துணிந்தார். "நெஞ்சில் ஒருகால் நினைக்கில் இருகாலுந்தோன்றும் முருகா என்றோதுவார் முன்" என்ற திருமுருகாற்றுப்படை வெண்பாக் கருத்தே இவ்வாறு பாடப்பெற்றது.

கலாபமயிலின் பல பெயர்ப் பெருமை, ஏனைய தூதுக்கு இவை இவை குறையெனப், மயலின் தூதே வாய்ப்புடைத்தென்றல், அண்டர்கோன் மயிலின் திண்டிறல் மாண்பு, மணிநிற மயிலின் அணி நடம்புகழ்தல் ஆகிய பகுதிகளில் மயில் சிறப்புக்களைக் கவியரசு கற்பனை நயத்துடன் பாடியுள்ளார்.

"தீந்தமிழ்ப்பா விற்றுத் திரியாமல் - சேந்த! நினது
இன்புகழ் நூலன்றி ஏனைப் புன் னூலோதிப்
புன்பொழுது போக்காமல் பூசனையும் அன்புமிகு
நல்லசெபம் சேவடியின் நாட்டமுதலாய நலம்
வல்லை பெற வந்து வரமருளி - எல்லையில்பேர்
ஆனந்த வீடும் அவனுக்கு அருள் புரிக"

என்று உரைத்து "பழனியாண்டவனை என்பால், மயிலே விரைந்து அழைத்து வா" என்று தொண்டன் என்ற பெயரில் கவியரசே மறைந்துள்ளார்.

1. தமிழை விற்றுத் திரியாமல், 2. இறை நூலன்றி புன்னூலை ஓதாமல், 3. வீண் பொழுது போக்காமல், 4. பூசனை - செபம் விடாமல், 5. இறைவன் சேவடியில் நாட்டங் கொள்ளல் ஆகியவற்றைக் கவியரசு வாழ்நாள் முழுதும் மேற் கொண்டிருந்தார். திருப்புகழ்க்கேட்டே இறைவன் திருவடி அடைந்தார். அறுமுகச் சிவனருளால் ஆனந்த வீடும் பெற்றார்.

## நூலறிமுகம்

இப்புத்தகத்தில் (1) பழனியாண்டவர் மயில்விடு தூது (2) தடாகம் திருமுடி சுவாமிகள் நெஞ்சுவிடு தூது என்னும் இரு நூல்கள் இடம் பெற்றுள்ளன.

397 கண்ணிகளில் அமைந்த பழனியாண்டவர் மயில்விடுதூது 1949ஆம் ஆண்டு தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் சாத்துக்கவிகளுடனும், கவியரசு அவர்களின் மாணாக்கர் திரு.க.கி. குமாரசிவம் அவர்களின் முன்னுரையுடனும் பழனி தவத்திரு சாது சுவாமிகளின் அருளாணையின்படி வெளிவந்தது.

மறுபதிப்பு 1973ஆம் ஆண்டு பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் வெளியீடாக, இந்து சமய அறநிலைத்துறை உதவி ஆணையராகப் பணியாற்றி திருவாளர் டி.எச். விவேகானந்தம் பிள்ளை அவர்களின் முயற்சியால் வெளிவந்தது.

தலைவியொருத்தி, தலைவன் ஒருவனைக் கண்டு காதல் வயப்பட்டு, அவனிடத்தில், "எகினம் மயில் கிள்ளை எழிலியொடு பூவை சகி குயின் நெஞ்சு தென்றல் வண்டு" முதலியவற்றில் ஏதேனும் ஒன்றைத் தூதாக விடுப்பதாகப் பாடுவது தூது இலக்கியம். தலைவன் தலைவிமாட்டுத் தூது விடுவதும் உண்டு. இது சிற்றிலக்கிய வகைகளிலே ஒன்று. பொதுவாகத் தூது இலக்கியங்களில் காதற்சுவை மிகுதியாக இருக்கும்.

இந்த நூலில் தொண்டன் ஒருவன் முன் செய்த புண்ணியத்தால், பழனியாண்டவனைத் தரிசிக்கும் பேறு பெற்றான்; அக்காட்சியினால் இன் அனுபவம் பெற்றான். அந்த அனுபவம் விரைவில் மறைந்தது. அந்த இன்ப அனுபவத்தை மீட்டும் பெறவும் அதை நிலைநிறுத்திக் கொள்ளவும் முருகனைத் தன்னிடத்தில் அழைத்துவருமாறு மயிலைத் தூதாக அனுப்புகின்றான். பக்திச்சுவை மிளிரும் இந்நூலில் தொண்டன் எனப்படுவான் கவியரசு அவர்களே.

சிவபரத்துவம், ஐமுகச்சிவம் அறுமுகச் சிவமாய்ச் சுப்பிரமணியன், குகன், முருகன் முதலிய பெயர்களுடன் உருக்கொளல், அப்பெயர்களின் பொருள், அறுமுகப் பெருமான்

அமர் ஆறு வீடுகள் அவற்றில் திருவாவினன்குடி ஏற்றமுடையதாதல், பழனிமலையின் மாண்புகள், நந்தியாச்சிரமத்தின் சீர், பழனியாண்டவனுக்கு நிகழும் நாள்வழிபாடுகளின் சிறப்பு முதலியன விரிவாகவும் சுவையாகவும் இந்நூலில் பாடப்பட்டுள்ளன.

தூது செல்வதற்குரிய பிற, பழநியாண்டவனிடம் தூதனுப்பத் தகுதியற்றன எனக் கூறிய காரணங்கள், மயிலே முருகனிடத்துத் தூதுக் கேற்ற முடையது எனக் கூறல், மயிலுக்கு வழங்கும் ஏனைய பெயர்கள், மயில் பல தாளங்களில் ஆடுதல் முதலியவற்றைக் கவிசாமர்த்தியமாகப் பாடியுள்ளமை முதலியன இலக்கியச் சுவை மிக்க பகுதிகள். மயிலின் சிறப்புக் குறித்து வேறு எந்த நூலிலும் இத்தனை செய்திகள் பேசப்படவில்லை எனலாம்.

பழனியாண்டவனிடம் தூது செல்லும் மயிலின் உதவியினை என்றும் மறவேன் எனத் தொண்டன் கூறும் பகுதியும், "கன்மவினைக் கட்டறுக்கும் ஞானக் கதிர்வேற் பெருமாற்குத் திட்டமுற என்கருத்தைச் செப்புவாய்" எனத் தொண்டன் தன் அடிமைத் திறத்தினைச் சொல்லும் பகுதியும். நெஞ்சக் கனகல்லை நெகிழ்ந்துருகச் செய்வன.

தடாகம் திருமுடிசுவாமிகள் நெஞ்சுவிடுதூது கவியரசு அவர்கள் தம் இளம் வயதில் பாடிய நூல்... 119 கண்ணிகளே கொண்ட சிறு நூல். இந்நூலின் பதிப்பு வரலாற்றை அறியவியலவில்லை.

தடாகம் என்னும் சிற்றூர் கோவைக்கு வடமேற்கே குருடிமலை அடிவாரத்தில் அமைந்துள்ள சிற்றூர். இங்கு திருமுடிசுவாமிகள், மற்றும் அவருடைய திருக்குமாரர் சண்முகானந்த சுவாமிகள் எனும் இருவர் சமாதிகள் உள்ளன. இருவரும் சித்தர்கள். சித்தவைத்தியத்திலும் வல்லவர்கள். இவர்களில் சண்முகானந்த சுவாமிகளைக் கவியரசு அவர்கள் தம் இளமைக் காலத்தில் கண்டுள்ளதாக அறிகிறோம். சண்முகானந்த சுவாமிகள் கோவையில் வைசியர்கள் வீதியில் உள்ள பஜனைக் கோயில் சந்தில் பல ஆண்டுகள் தங்கியிருந்து மக்களின் உடற்பிணியும் உயிர்ப்பிணியும் நீக்கித் தொண்டு புரிந்து வந்தார். கவியரசின் அம்மான் திரு. வெள்ளிங்கிரிக் கவுண்டர் முதலியோர்

இவரை ஆதரித்து வந்தனர். இவர் தம் ஆன்மிகப்பணியினைச் செய்ய ஒரு பஜனை மண்டபம் அமைத்துக் கொடுத்தனர். அந்தக் கட்டிடம் இன்றும் உள்ளது. இந்தத் தொடர்பு, கவியரசினை இந்நூலை ஆக்குவதற்கு ஊக்கியது.

திருமுடிசுவாமிகள் திருச்சிராப்பள்ளியில் பிறந்தார். திருமண நாட்டமின்றி ஆன்மிக நாட்டம் கொண்டவராக வளர்ந்தார். திம்மப்பசுவாமிகள் எனும் வீரசைவத் துறவியொருவரின் தொடர்பு கிட்டுகின்றது. அவர் திருமுடிசுவாமிகளைத் தடாகத்துக்கு வரவழைத்துத் தீக்கை அளித்து சித்தமருத்துவம் முதலியவற்றைக் கற்பித்து, திருமணம் செய்துகொண்டு இல்லறவாழ்க்கை நிகழ்த்தியபின் துறவு மேற்கொள அறிவுறுத்தி மறைகிறார். இன்றும் திம்மப்பசுவாமிகள் குருடிமலைச் சாரலில் இருப்பதாக மக்கள் நம்புகின்றனர்.

திருமுடிசுவாமிகள், சண்முகானந்த சுவாமிகள் ஆகியோரின் சந்ததியினர் திருச்சிராப்பள்ளி, சென்னை, பெங்களூர் நகரங்களில் வசித்து வருகின்றனர். ஆண்டுதோறும் பங்குனி மாதம் இவ்விரு சித்தர்களின் குருபூசைவிழா தடாகத்தைச் சேர்ந்த பெருமக்களால் விமரிசையாகக் கொண்டாடப் பட்டு வருகின்றது.

# பதிப்புரை

தவத்திரு. கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையத்தின் சார்பில் 08-6-2011 அன்று தெய்வத்திரு. ப.சு. சின்னசாமிக்கவுண்டர் அவர்களின் நினைவு அறக்கட்டளையின் நான்காம் ஆண்டு விழாவில் **"கவியரசு அவர்களின் முருக இலக்கியங்கள்"** எனும் தலைப்பில் சிரவை ஆதீனகர்த்தர் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் முன்னிலையில் உரையாற்றும் பேறு கிட்டியது. அவ்வுரையின்போது கவியரசு அவர்களுக்கு சிரவை ஆதீனம் இரண்டாம் குருமகா சந்நிதானங்களிடம் இருந்த கேண்மை இடம் பெற்றது.

நன்றியுரை வழங்கிய ஆதீனக்கவிஞர் திரு. ப.வெ. நாகராஜன் அவர்கள் கவியரசுவின் படைப்புக்களெல்லாவற்றையும் திரட்டி வெளியிட வேண்டும் என்ற தம் விழைவினை வெளிப்படுத்தினார். வாழ்த்துரை வழங்கிய ஆதீனகர்த்தர், புலவரின் விழைவினைச் செயல்படுத்தத் திருவுளம் பற்றி ஆணை பிறப்பித்தார்கள். சந்நிதானங்களின் திருவாணையின் வண்ணம் இந்நூல்கள் வெளிவருகின்றன.

முதலில் அனைத்து நூல்களையும் திரட்டி ஒரே புத்தகமாக வெளியிடும் எண்ணமிருந்தது. புத்தகம் பெரிதாகவும் கனமாகவும் இருந்தால் படிப்பதற்குத் தோதாக இராது. எனவே தனித்தனி நூலாக வெளிவருகின்றது. இந்த வரிசையில்,

1. பழநியாண்டவர் மயில்விடுதூது.
2. தடாகம் திருமுடிசுவாமிகள் நெஞ்சுவிடுதூது
3. திருப்பேரூர்க் கலம்பகம்.
4. எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழ்.
5. திருவேரகம் சாமிநாதன் பிள்ளைத்தமிழ்
6. மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ்
7. திருச்சுழியல் துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ்.
8. சீகாழி திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ்.
9. தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

ஆகிய நூல்கள் வெளி வருகின்றன.

கவியரசு அவர்களின் நூற்றாண்டு 2002ல் நிறைவுற்றது. அவருடைய அன்பிற்குரிய தலைமை மாணாக்கரும் என்னுடைய பெருமதிப்பிற்குரிய புலமைமிக்க பல்துறை அறிஞரும் நண்பருமாகிய சித்தாந்த ஞான சரசுவதி முனைவர் ந. இரா. சென்னியப்பனார் அவர்கள் கவியரசு அவர்களின் நூற்றாண்டு விழாவினை நடத்த வேண்டும், அவருடைய நூல்களைத் திரட்டிப் பதிப்பிக்க வேண்டும் எனப் பலமுறை வலியுறுத்தினார்கள். நூல்களைப் பதிப்பிக்கும் முயற்சியினையும் மேற்கொண்டார்கள். அவர்கள் அளித்துள்ள அணிந்துரை இவ்வெளியீட்டினைச் சிறப்பிக்கின்றது.

இந்நூல்களின் வெளியீட்டினை ஊக்குவித்த திருக்கயிலாய பரம்பரை திருப்பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களின் திருவடிகளுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல்களை அச்சேற்றி வெளிக்கொணரத் திருவுளம் பாலித்த சிரவையாதீனம் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் திருவடிகளுக்கு என் வணக்கம்.

இம்முயற்சியில் எல்லாவிதத்திலும், துணைநின்ற சிரவையாதீனக் கவிஞர், பெரும்புலவர் திருமிகு ப.வெ. நாகராஜன் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த பேராசிரியர் திருமிகு. முனைவர் ந.இரா. சென்னியப்பனார் அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்டு வழங்கிய சௌமி அச்சக உரிமையாளர் தே.திருஞானசம்பந்தன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

- பதிப்பாசிரியர்

*சிவமயம்*

## பழனியாண்டவர்

# மயில்விடு தூது

### காப்பு - விநாயகர்

அளிபயிலுந் தென்பழனி யாண்டவனை வேண்டிக்
களிமயில்சேர் தூதுக்குக் காப்பாம் - தெளிநறுந்தேன்
தேங்குஞ் சரத்தாமச் செஞ்சடைமுக் கட்கருணை
ஓங்குஞ் சரத்தா னுவந்து. 1

### சற்குருநாதர் வணக்கம்

தஞ்சமென வஞ்சலெனுஞ் சாதுகுரு நாதனிரு
செஞ்சரண நெஞ்சதனில் சேர்தலினால் - விஞ்சும்
அயில்விடலை தென்பழனி யாண்டவன்பா லன்பாய்
மயில்விடுதூ தாகு மகிழ்ந்து. 2

### வித்யாகுரு துதி

கந்தச் சுவாமி கருணா கரச்சாமி
சந்தச் சுவாமிதமப் பச்சாமி - மந்தத்
துயில்விடு மாறருளுந் தூயகழல் போற்ற
மயில்விடு தூது வரும். 3

### நூல்

### கலிவெண்பா

### சுப்பிரமணியன் ஒப்பறு பெருமை

பூமேவு மாது புணரும் புயல்வணனு
நாமேவு மாதுபுணர் நாயகனும் - கோமேவும்
யாக்கைத்தே வேந்திரனும் இன்னிசைய நான்மறையும்
ஆக்கத்தே வாதியர்கள் யாவர்களும் - நோக்கி
யறிதற் கரிய வநாதியா யாதோர்
குறியுங் குணமுமிலாக் கோமான் - நெறியால்
அறிவை யறியு மறிவ ரகத்துட்
செறியும் பரம சிவமாய் - அறியும்
அறிவி னறிவாகி யவ்வறிவி லூறும்
பிறிவருபே ரின்பப் பெருக்காய் - தெருமுமல 5

நோய்நீங்கி யாருயிர்கள் நோன்மையுற நோன்றெடுத்த
தாய்போல வைத்த தயாவினால் - ஏயும்
உருவு மருவு முருவருவு மாகப்
பருவ வடிவங்கொள் பண்பான் - மருவு
முலகுயிர்கள் யாவுமாய் வேறா யுடனாய்க்
கலவிக் கலவாத காட்சி - யிலகும்
அவனருளால் அல்லாமல் ஆர்க்கு மெவைக்கு
மிவனின்ன னென்னவொண்ணா ஏந்தல் - நவையறுமா
றெப்பிரமா ணத்தாலு மெச்சமய மும்பரவு
சுப்பிரமண் யப்பெயர்சேர் தொன்மையான் - எப்போதும் 10
ஏசுத லில்லாப் பிரமம்இது வென்றுமறை
பேசுஞ் சிவசுப் பிரமணியன் - தேசமெலாம்
ஆக்கி அளித்தழிக்கு மாற்றலவர் போற்றுபுகழ்
தூக்குஞ் சதாசிவவோஞ் சுப்ரமண்யன் - ஆக்காத
ஆக்கை யிளமை யழியாத தெய்வமணம்
பூக்கும் அழியாப் புகழ்முருகன் - தேக்கரும்பர்
எண்ணா யிரங்கோடி யீண்டிடினுங் காலழகு
நண்ணா வெழின்மிகுந்த நன்முருகன் - எண்ணாமல்
ஓங்காரத் தின்பொருளை யோதாத வேதாவைத்
தாங்காச் சிறைவைத்த தாடாளன் - பூங்காலிற் 15
றெண்டனிடு தந்தைக்குச் செம்பொருளைச் செப்பியாட்
கொண்ட பரம குருசாமி - விண்டுவையோர்
கையாற் குறுக்குங் கலசமுனிக் கின்னருளைப்
பொய்யா தளித்த புகழ்ச்சாமி - வையமெலாம்
தன்னுடைமை யாகத் தனையுடையார் வேறில்லாக்
கொன்னுடைய சாமி குகசாமி - முன்னர்மதன்
வெந்ததுநன் றென்றுள் வியக்கவவற் குற்சிதஞ்செய்
அந்த மிகுங்குமர னாஞ்சாமி - பந்தமலக்
குற்சிதங்கள் போக்குங் குமாரபர மேசனுயிர்
நற்குகையில் மேயகுக நாயகன் - சிற்பொருள்கள் 20
அத்தனைக்குந் தம்பெருமா னாளுஞ்சே னாபதிபேர்
எத்தனையோ கோடி இசையியவுள் - பத்தித்

### அறுமுகப்பரமன் அமர்படை வீடுகள்

தரங்குன்ற லில்லார்க்குச் சன்மவிடாய் தீர்க்கும்
பரங்குன் றொடுஞ்செம் பவளம் - தரளமொடு
நந்தூ ரலைவாயில் நண்ணி முழங்குதிருச்

செந்தூ ரலைவாயுஞ் சித்தர்குழாம் - வந்தித்
தொருவாவி னங்குடிலி லுய்க்காது காவென்
திருவாவி னன்குடியும் தெய்வத் - திருமறையோர்
நீரகத்தா லாறெழுத்து நெஞ்சமுத்தி யஞ்சலிசெய் 25
ஏரகமும் பூம்புனந்தோ றேனல்விளை - நீரருவி
முன்றிறொறு மோடி யொளிர் முத்திறைக்குந் தண்சாரற்
குன்றுதொறுஞ் சூனிறைந்து கொண்டலினம் - துன்றி
முழமுதிரு மோசை முழங்கமயி லாடும்
பழமுதிருஞ் சோலையும் பல்சீர் - விழவுமலி
நன்னகரம் இன்னும் பலவு நயந்திருந்து
மன்னுயிர்கட் கின்பம் வழங்குகினு - மின்னும்

பழனி மலையின் பலபெருஞ் சிறப்புக்கள்

முடியுடைய வேந்தரொரு மூவரினு முன்னாம்
தொடியுடைய தோட்சேரர் தோன்றல் - கடிபொழில்சூழ்
தில்லைச்சிற் றம்பலத்துள் தேவர்பிரான் காற்சிலம்பின்
மல்லலொலி யார்ந்துமகிழ் வார்செவியான் - தொல்லுயிர்கள்
உள்ளங் கழறியவை யுள்ளபடி நன்குணர்ந்து
தெள்ளிமனு நீதிசெயுஞ் செங்கோலான் - வள்ளல்
முதலைவாய்ப் பாலனுயிர் மீட்டமுனைப் பாடி
முதலைவாய்ப் பன்பாக்கி மூவா - முதலார்வாழ்
அண்ணற் கயிலைக்கவ் வாரூர ரோடாடற்
பண்ணற் பரிமேற் படர்ந்துசுவை - உண்ணமுதல்
தெய்வவுலா வோதுபுகழ்ச் சேர னணிகொங்கில்
நய்தலிலா வைகாவூர் நாடதனில் - சய்யம்வளர்
மாதிவ ராக மலைவில்லி வாழ்நெடிய
ஆதிவ ராகமலைக் கண்ணிதாய்ச் - சோதிமிக 35
வோங்குபசும் பொற்கிண்ண மொத்தமலர் மெத்தமலர்
கோங்குவனம் பச்சைக் கொடியுமையாள் - பாங்கிலுறை
தாவிளஞ்சே வேறி தனைநோக்கி நோற்றநறுங்
கூவிளஞ்சேர் தண்காடு கொண்டல்வணன் - மேவியெனைத்
தண்டுளவத் தார்மாற்பிற் றாங்குகவென் றோங்குமவாக்
கொண்டுதிரு நோற்ற குளிர்பொழிலும் - அண்டருண
நல்லினிய வுண்டிவகை நல்குமெழிற் றேனுவுடன்
எல்லியவுள் நோற்றசுவை யேற்றமிகு - நெல்லிவளர்
சோலைநிறை சூழ்ந்திலங்கு தொன்னகரம் செந்நெல்சுவை
ஆலைநிறை யோங்கு மணிவயலும் - நீலநிறப் 40

பட்டுக் குடைகள் பலவுநிறுத் தாலொத்த
மட்டுப்பூம் பாளை மலிகமுகும் - நெட்டைமடற்
பொன்னங் குடம்பொதிந்தாற் போலமுதிர் நெற்றிளநீர்த்
தென்னம் பொழிலும் சினவேழத் - தின்கைமுகம்
காட்டுங் குலைக்கதலிக் காடும்தே மாம்பொழில்கள்
கூட்டங்கொண் டோங்குங் குராமருத - மீட்டளிகள்
பாடுஞ் செருந்திமகிழ் பாதிரிக டம்புவழை
தாடிமங் கூதாளம் தண்காயா - ஏடவிழுங்
கொன்றை குருந்தங் குருக்கத்தி சண்பகம் 45
மன்றல் மலிமவ்வல் மல்லிகை - துன்று
மருக்கொழுந்து பச்சை மலியவளர் பூங்காத்
திருக்கிளருந் தாமரைசேர் தெண்ணீர்ப் - பெருக்குமலி
வாவிகளு நாற்றிசையு மல்கிமணி மாடங்கள்
தூவியனஞ் சேக்கும்பல் சூளிகைகள் - நீவியணி
மாதரெழில் மைந்தர் மகிழு நிலாமுற்றம்
சோதிமணி மாடநிறை தொன்னகராம் - கோதில்
திருவாவி னன்குடியே செவ்வேட் பிரானுக்
கொருவா வுவகையுட னுற்ற - திருநகரென்
றான்றோர் பலரு மறையக்கேட் டேனுளத்தில்
தோன்றாத பேருவகை தோன்றியதால் - ஆன்றபிறப் 50
பெண்ணிலவை தம்மி லியற்றுந் தவப்பயனு
நண்ணியதா லூக்க நனியுந்தத் - திண்ணியபே
ராவலொடு மப்பதியை யண்ணினேன் முன்செய்த
தீவினைகள் தீர்ந்தவெனத் தேறினேன் - ஆவிக்
கிரவணமா மாசையொழித் தீடிலொளி யீயுஞ்
சரவணமாப் பொய்கைதனைச் சார்ந்து - பரவுந்தண்
பூம்புனலிற் றோய்ந்துவெண் பூதியணிந் தாறெழுத்துந்
தோம்பறியச் சிந்தித்துச் சுத்தியொடும் - பூம்புகர்சேர்
துங்கக் கரிமுகத்துத் தூமணியைத் தாள் பணிந்து
சங்கத் தமிழ்வளர்த்த சண்முகனை - யெங்குருவாம் 55
நீதானே கோதேது நேராத தீங்கனியாம்
வாதாநே ரிற்பவள வாய்முத்தென் - றோதும்
மருவாவி நன்குடிகொள் மாதேவன் சேயைத்
திருவாவி னன்கொடியிற் சேவித் - துருகியுளம்
சூழ்வந்து கும்பிட்டுத் தோத்திரித்துப் பேரின்பம்
மூழ்கி விடைபெற்று முன்னெமது - தாழ்குடியைக்

அருண்மிகு நந்தி யாச்சிரமச்சீர்

கொத்தடிமை கொண்ட குருசாது நந்தியமர்
வித்தகமே லோங்குமட மேவினேன் - நித்த
நிகமாக மாதிகலை நேர்மையுட னாய்ந்து
சகமாயை விட்டொழிந்து சார்ந்தார்க் - கிகபரங்கள் 60
என்று மழியாத வின்ப முடனருள்வ
பொன்ற லிலாதசிவன் பொன்னடியே - யென்று
துணிந்து சரியை கிரியைசெய் தொண்டர்
உணர்ந்த சிவயோகர் உண்மை - மணந்தசிவ
ஞானியர்கள் மோனியர்கள் நாதாந்தர் - போதாந்தர்
மேனிலைய சித்தாந்தர் வேதாந்தர் - ஏனையவாம்
பல்வகைய கொள்கையரும் பண்போ டுறவாகி
நல்வகைய நூற்பொருளை நாடுநரும் - கல்கனியத்
தேவார மாதித் திருமுறைக ளன்போடு
நாவாரப் பாடுநரும் நம்மருணைப் - பாவாண 65
னோதுந் திருப்புகழ்த்தேன் ஓங்கு மிசைவகுப்பு
யாதுந் தருவோ னலங்காரம் - நாதன்
அநுபூதி யாதி யருந்தமிழ்ப்பா வோதி
மனுபூதி பெற்று மகிழ்வோர் - கனிவாய்
வடமொழியில் மார்க்கண்டன் மன்னுமுப மன்னு
திடமன்னு புட்பதந்தன் சீர்த்த - சடைமுனிவர்
ஏத்தும் புகழ்த்துதிக ளின் னிசையிற் பாடுநரும்
கூத்த னடியார் குழாங்கள் தமக்-கார்த்தவென
ஆறுசுவை நாலுவகை யுண்டி யடுவாரும் 70
வீறுவீ றுண்ண விளம்புநரும் - வேறுபல
கைத்தொண் டியற்றல் கடனாகக் கொண்டவரும்
சித்தமகிழ் வோடிருந்து சேவிப்பப் - பத்தர் தமக்
கே துகுறை வும்வாரா தின்னருளால் வீற்றிருக்கும்
சாதுகுரு நாதன் மலர்த் தாள்வணங்கிப் - போதம்
பெருகு கடைக்கணருள் பெற்று மகிழ்ந்தே
திருவனுஞை பெற்றபின் செங்கை - யொருகால்

பவவினை யொழிக்கும் சிவமலை மாண்பு

கவித்து வரையும் குழித்துக் கடலும்
அவித்த குறுமுனிவ னன்பால்-சவிக்கயிலை
சென்று சிவனடிகள் சேவித்துப் பின்னங்கு
நின்ற விருசிகர நேர்நோக்கி - உன்றன் 75

ஒளிவடிவுஞ் சத்தி யுயர்வடிவு மாய
நளிமுடிக ளின்னவற்றை நாளும் - அளிமலர் தூய்த்
தென்பொதியவெற்பினிடைச் சேர்த்துத் தொழவெனக்கு
நின்கருணை நேர்ந்தளித்தி நின்மலா - என்பதாய்ப்
போற்றிக் கொணர்ந்தோங்கு பூர்ச்சவனத் தேவைத்துத்
தூற்றிமலர் தாழ்ந்து தொழுதபினர் ஆற்றல்
மிகுமிடும்பற் கண்டவற்றை மேன்மைபொலி தென்பாற்
தகுமுறையிற் கொண்டுவரச்சாற்ற - நெகிழுமனத்
தன்போடு மவ்வாறே யவ்வரையைக் காவடியிற்
றென்பாற் கொடுசெல்வான் செவ்வேளின் - றன் செயலால் 80
ஓங்கு வராககிரி யுத்தரதிக் கிற்பழனிப்
பாங்கரிடை வைத்துப் பசியாற்றி - யோங்கறமை
மீண்டு மெடுக்க முயல்காலை வேலன்மிடுக்
கீண்டு மிளஞ்சிறுவ னென்றெய்தி - யாண்டவ்
வசல மசலமே யாகச் சிவப்பேர்
அசல முடிமே லமர - முசலமொரு
கைக்கொண்ட வல்லிடும்பன் கண்டுசினங்கொண்டெதிர்க்கப்
பொய்க்கொண்ட போர்செய்து பொன்றுவித்து - மைக்கொண்டல்
மேனி யிடும்பனுக்கு மீண்டும் உயிருதவி
ஆனியறு தொண்டனென ஆண்டருளிப் - பானிறுவி 85
இட்டமுட னம்மலைமே லீசன் மகனிருந்தான்
சிட்டர் தொழும்பழனிச் சீர்ப்பெயரான் - நட்டதனால்
பார்மீது நின்ற பழனி மலைகதிரோன்
தேர்மீது செல்லத் திகைக்குமலை - போர்மதனன்
வல்லமைகள் செல்லா வலிமைத் தவமுனிவர்
நல்லமனம் போற்பெருமை நண்ணுமலை - தொல்லையுயர்
விந்த மலையடக்கு மேன்மைக் குறுமுனிவன்
வந்து தெரிசித்து வாழ்த்துமலை - இந்திரனும்
மாலயனும் வானோர்க ளேனோரும் வந்தன்பால்
சாலவலம் வந்துமுடி தாழ்த்துமலை - காலன்வலிக் 90
கஞ்சியவர்க் கெல்லா மரணாக நின்றமலை
செஞ்சொற் புலவர் கவிசேர்ந்தமலை - தஞ்சமென
வந்தார் விரும்பும் வரங்க ளெவையுமுடன்
இந்தா வெனவளிக்கு மின்பமலை - மந்தாரம்
பாரிசா தங்கற் பகமெங்கு நாறுமலை
வேரிசால் சோலை விளங்குமலை - மூரிமத

வெற்புவிளை யாடும் வியன்சுனைகள் மேவுமலை
கற்புக் கொடிகள் கஞூலுமலை - சற்பமொடு
திங்கள்புனல் தண்புயல்கள் சேரு முடியதனால்
செங்கனக மேனி திகழ்தலால் - பொங்குமத 95
யானைசின வேங்கைபயி லாகத்தால் பாலோடு
தேனெய்புரிந் தாடுந் திறத்தினால் - மானையிடத்
தேந்திமயி லாகத் திருத்திச் சிறப்புக்கண்
ணார்ந்துசிவ ரூபம்தா னாவதனைத் - தேர்ந்துலக
முய்ய வுருவா லுரைக்குஞ் சிவமலைநற்
செய்ய கமலைஅருள் சேர்க்குமலை - துய்ய
பரமமயச் சோதி மயமாம் பழனி
பிரமனெடு மால்போற்றப் பேறு - தருபழனி
கங்கை நதியின் கரைமேவுங் காசியினும்
துங்க மிகுபழனித் தொன்மைமலை - மங்காது 100
பொங்கு மதிசயங்கள் பூத்த பழனிமலை
எங்கு முளவுலகம் ஈரேழும் - தங்காதல்
கொண்டு புகழக் குலவு பழனிமலை
தொண்ட னருணகிரித் தோன்றலெனை - யண்டும்
செனனம் விடவொருகாற் சேவித்தி லேன்பேர்
கனிவினொடு மென்றும் கரையேன் - தினமுமதன்
பேர்மொழியும் போர்களடி பேணித் தலைக்கணியும்
சீர்பெறுகி லெனென்று சிந்தையொடும் - ஆர்வம்
பெருகப் புகழும் பெரிய பழனித்
திருமலையின் றாழ்வரையைச் சேர்ந்தேன் - பெருகு 105

அன்பர் குழாத்தோடு அணிவரை யிவரல்

மருவியென ஞானமத மார்த்திழியுஞ் சோதிக்
கரிமுகவொற் றைக்கொம்பர்க் கண்டு - திருவடியில்
தெண்டனிட்டுக் குட்டிட்டுத் தொப்பணமிட் டுச்சிரசிற்
கொண்டுகரங் கும்பிட்டுக் கோதில்பல - தொண்டர்குழு
மொட்டையிட்டு மேனி முழுதுந்தா நீறணிந்து
சிட்டமுடன் காவடிதோட் சேர்த்தியயங் - கொட்ட
உருகா தரத்தா லுடல்புளக மெய்தி
முருகா முருகா முருகா - அருள்பொழியும்
ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் யாவரினும்
வீறுசிவ சுப்ரமண்யவேலவா - தேறுமவர் 110
அஞ்சுதலை நீக்கியுனத் தாறுதலை யீயவென

மஞ்சுதலை சூழ்பழனி மாமலைவாழ் - விஞ்சுபுகழ்
ஆண்டவா வோமரஹ ராவென்று வான்பரவ
நீண்டபே ரோசை நிகழ்த்திடவும் - ஈண்டுசிலர்
தங்கள் வறுமைச் சலதி கடத்தினதும்
பொங்கு துயர்நோயைப் போக்கியதும் - மங்கலஞ்சேர்
இல்லாட் புணர்த்தியது மின்மகவை ஈந்ததுவும்
பொல்லா எதிரிகளைப் போக்கியதும் - நல்ல
கலைஞானங் கைகூடக் காட்டியதுஞ் சிந்தை
யலையாத நிட்டை யளித்துத் - தொலையாத 115
பேரின்ப மூட்டியதும் பின்னும் பலபலவாம்
சீரருள்கள் பேசியன்பாற் செல்வாரும் பாரின்கண்
எண்ணரிய கேத்திரங்க ளெத்தனையோ மூர்த்தங்கள்
புண்ணியநற் றீர்த்தம் பொருந்திடினும் - உண்மையினில்
தென்பழனி மாமலைக்கும் தெண்டா யுதக்குகற்கும்
நன்புனல்சேர்ஷண்முகப்பேர் நன்னதிக்கும் - பன்னிடவோர்
ஒப்பில்லை யில்லையென வோதிப் புகழ்வாரும்
கப்பூரந் தேங்காய் கதலிபலம் - திப்பியமாம்
பஞ்சாமிர் தங்கூட்டுப் பண்டங்கள் ஆனைந்து
விஞ்சுமுழுக் காட்டவுள வேறுபொருள் - நெஞ்சினில்முன் 120
நேர்ந்த கடன்கள் நிரை நிரையாய்க்கொண்டு செல்வோர்
ஆர்ந்தபதி னெண்டேயத் தன்பர்குழாம் - சேர்ந்துநிறைந்
தெண்ணு ளடங்காதார் ஏறிமலை மீதுசெலக்
கண்ணு மனமுங் களிகூர - நண்ணி
இடும்பன் றிருமுன்னின் றேத்தியருள் பெற்று
நடந்து மலையுச்சி நண்ணி - இடம்பரவு
கோயில்வலம் வந்து கொடிமரமுன் றண்டனிட்டு
வாயில் நுழைந்தேன் மகிழ்வோடும் - ஆயிடைச்செஞ்

குமரன் கோயில் குலவுஞ் சிறப்பு

சந்தனச்சாந் தின்மணமோ தண்பனிநீர் வாசனையோ
மந்திரமாம் வெண்ணீற்றின் மாமணமோ - பந்தமுறு 125
மாலைகளின் தூமணமோ மட்டற்ற தேனறுநெய்
ஆலைதரு பூங்கழைச்சா றைந்தமிர்தம் - கோலக்
கலயரிடு குங்கலியம் காரகிலின் றூப
மலையு மணமோ வகுத்துச் - சொலவொண்ணா
தோதுந் திருப்புகழ் தேவார மோங்கிசையோ
கீதங்க ளின்முழக்கோ கேடில்லா - நாதசுர

வாசினையோ கண்டா மணிமுழக்கோ தொண்டர்குழாம்
ஆசி லரஹரவென் னார்ப்பொலியோ - பேசுங்கால்
ஏது பெரிதென் றியம்ப லெளிதன்று
சோதி திருவாலயத்துட் தொண்டர்குழாம் - கோதில் 130
ஒருவர் திருமார்பி லுற்றதிரு வெண்ணீ
றொருவர் முதுகிலுற வீண்டித் - திருமுன்னர்ச்
சேவித்து நிற்கும் திறங்கண் டவர்போலப்
பாவித்து நின்று பரவினேன் கூவுதிறற்
செஞ்சேவ லோங்கு கொடிச் செவ்வேற் குமரகுரு
மஞ்சாரு முற்கோல மாற்றியபின் - நெஞ்சார

அபிராமி மைந்தன் அபிடேக மாடல்

எண்ணெய் சுவைநெல்லி யேரா ரரிசனநல்
புண்ணியவா னைந்துபால் போந்தயிர்நெய் - திண்கழைநீர்
ஐந்தமுதம் தேனிளநீ ராசில்பழச் சாறுநறுங்
கந்தமிகு சந்தனத்தின் தண்கலவை - நந்தும் 135
பரிமளப் பன்னீர் தபனம் பரவி
விரிகடலில் மொண்டெழுந்து மேகம் - சொரிவதென
ஆராத காதலுட னன்பர் முகந்துதவ
நேராரு மில்லாதா னேர்ந்தாடி - நீரீரம்

தண்டபாணி கொண்ட மெய்க்கோலம்

போகநன் கொற்றிப் பொலனா ணரைப்பூட்டி
சாகைமறைக் கோவணமுந் தற்றுமிக - மோகமுறும்
பல்லுயிரை வாட்டும் பகையான மும்மலத்தைக்
கொல்லுதற்குக் கொண்டபோர்க் கோலம்போல் - கல்லாடை
சிற்றிடையிற் சேர்த்துத் திகழுத்த ராசங்கம்
வெற்றியமர் திண்தோளின் மேலணிந்து நெற்றிமுதல்
அங்கெமலாம் வெண்ணீறளைந்துநுதற் பொன்பொட்டிட்
டங்கண்மணி மாலையணிந்துநறுந் - தொங்கலும்
இண்டையுங் கண்ணியு மேரார்ந்த வாசிகையும்
கண்டிகையு மேனைக் கலன்களும் - கொண்டணிந்து
தண்டமொரு செங்கைமலர்த் தாங்கிச்சூர் வேரையறுத்
தண்டர்குடி காத்தமுனை யாரயிலைத் - திண்டோளிற்
சேர்த்தருளி யோர்கை திருவரையில் வைத்தெம்மை
ஆர்த்தபிறப் போடிறப்பும் அன்றயனார் - கூர்த்தெமது
புன்றலையின் மேலெழுதும் பொல்லா எழுத்தினையும்
ஒன்றவழி நோன்புதிறல் உற்றடியார் - நன்றறிந்த 145

சித்தத்தும் வேத சிரத்தும் அருணகிரி
யத்தன் புகழ்பாட் டடிதோறும் - நித்தனுமை
கண்ணகத்தும் விட்டகலாக் காமர் திருவடியில்
வண்ணச் சிலம்பும் வனைந்தெதிரில் - நண்ணு

தேசமர் வேலவன் பூசனைச் சிறப்பு

நிலையாடி கண்டு நிலமதிர ஆர்க்கும்
பலவாச் சியங்கள் பரவப்-பலவகைய
இன்னடிசில் பண்ணியங்கள் இன்கனிகள் தெங்கங்காய்
நன்மைமிகு பானீய நல்கியவை - தன்னருளாற்
கைதொட்டு நீக்கிக் கரநீவிச் செங்கனிவாய்
ஐவகைய வாசங்க ளார்ந்ததற்பின் - செய்ய 150
திருமுகத்தின் வேர்வொற்றித் தீபநறுந் தூபம்
அருவிலைய நீறுதெளி யாடி - விரிகவிகை
சாமரை தால விருந்தஞ்சாந் தாற்றிமுத
லாமவைக ளெல்லா மமர்ந்தேற்றுத் - தோமகலும்
சந்தச் சதுர்மறையும் தன்புகழ்சொல் செந்தமிழும்
கந்த புராணக் கவிதையும் - முந்தும்
இசையும் இயமும் எதிர்முரலக் கேட்டு
வசையில் நடன மகிழ்ந்தே - இசைவாகக்
கற்பூர தீபமெதிர் கண்டு மகிழ்ந்தோர்க்கு
நற்பூதி வேண்டும்வரம் நல்கியபின் - விற்பருதி 155

முருகப்பெருமான் திருவுலாக் காட்சி

நீலக் கடன்முகட்டின் நேரே எழுந்தென்னக்
கோலக் கலாபக் குதிரையின் - மேலமர்ந்து
பேரழகுக் கீடழிந்த பெற்றிமையாற் றன்குடையை
மாரன் றிறைகொடுத்தால் மானவொளி - சேரழகார்
முத்துக் குடைநிழற்ற முன்னந்தன் பால்வளர்ந்த
அத்தன்பாற் கங்கை அடைந்தென்னப் - பத்திமணிச்
சாமரைகள் வீசநிறைத் தாலவட்டங் காற்றசைப்பப்
பூமலிந்த பொய்கைப் புனல்படிந்து - காமருவு
பூந்தாதுந் தேனும் பொருந்த வளைந்தசைந்து
தேந்தென்றல் முன்னடந்து சேவிப்பத் - தாந்தாமென் 160
றோசைத் தவில்முழங்க உற்றபல தூரியங்கள்
ஆசை தொறும்பரவி ஆர்ப்பெடுப்பத் - தேசுமலீ
கோயில் புடைசூழக் குன்றத்தின் மீதினுலாத்
தாயி லினியன்வரச் சந்நிதிமுன் - நேயமொடு

விசாகப்பெருமான் தசாங்கச் சிறப்பு

சாமமறை யோதுஞ் சதாசிவவோம் சுப்ரமண்ய
நாமமுட னாயிரநன் னாமத்தான் - ஏமமலை
தன்னைச் சிலையாய்த் தரித்துப் புரமெரித்த
முன்னவன் வைத்த முழுக்கருணை - தன்னால்
திருவுருவாய் நின்ற சிவகிரியா னன்பு
பெருகுளத்திற் றன்கருணை பெட்பப் - பெருகிவரு 165
விண்முகத்தார் மண்ணோர் வியனாகர் மூழ்குபுனற்
சண்முகத்தா றோங்கு தவப்பயன்போல் - மண்ணின்மேல்
வேண்டு நலமீயும் மேன்மைவரத் தாறுடையான்
ஈண்டுபுகழ் நல்லா வினன்குடியான் - மண்டுபுகழ்க்
கன்மாப் பலகை கவினுறமேல் வீற்றிருந்த
பன்மாப் புலவர்சொல் பாமாலை - தன்னோடு
பண்கடப் பின்றிப் பமர வினமுரலுந்
தண்கடப்ப மார்பணிந்த தாரினான் - விண்கடந்து
நாகருல கங்கடந்து நாடிநொடிப் போதில்வருந்
தோகைமயில் வேகத் துரகத்தான் - மாகம் 170
அளவுங் கயிலை யணிநடைபெற் றென்ன
வளர்மும் மதகரியான் வையம் - தளருமல
ஆரிருளி னீங்கி யருட்சோதி பெற்றுய்யச்
சீரினொடு கூவு கொடிச் சேவலான் - யாரெனினும்
தன்னடைந்தார்க் கின்பங்கள் தந்தருளுங் கந்தனிவன்
முன்னடைவிர் என்றறையு மும்முரசான் - மென்மலர்வாழ்
முந்தை மறையோன் முதலோராற் றோற்றமுதல்
ஐந்தொழிலுஞ் செய்விக்கு மாணையான் - எந்தை
இவனென் றொருசிலர்க ளேத்த வொருபால்

நீபத் தாரோன் கோபப்பிரசாதம்

புவனங் கடந்தோற் புடைத்துக் - கவலைமிகு 175
வன்சிறையி லிட்டதூஉ மாமுனிவன் வேள்விவரு
கொன்றகரை யூர்ந்தடக்கிக் கொண்டதூஉம் - பன்றியினைக்
கோட்டை முரித்துக் குழகனுக்கன் றீந்துதூஉம்
கேட்டை மிகுகவுஞ்சஞ் செற்றதூஉம் - கோட்டுமத
மாமுகனை மாட்டியதூஉம் வன்சிங்கற் கொன்றதூஉம்
தீமைமிகு சூர்மாச் சிதைத்ததூஉம் - ஆமிவைபோற்
சேவகங்க ளெல்லாம் தெரிந்தொருபா லேத்திவரத்
தேவர் துயர் தீரவரன் சேயாகி - வாவிதனில்

மாத ரறுவர் மகிழவிளை யாடியதூஉம்
தாதை மனங்குளிரத் தக்கமறை - யோதியதூஉங் 180
கும்ப முனிக்குக் குருவாக் கருளியதூஉம்
உம்பர் சிறையை ஒழித்ததுஉம் - இம்பர்
மலையிற் சிறைப்பட்ட மாப்புலவன் பாட்டிற்
குலையின் மெழுகா யுருகிக் - கொலைகருதும்
பூதத்தைக் கொன்று புலவனுயிர் காத்ததூஉம்
மாதத்தம் வெட்ட வளர்த்ததூஉம் - மேதக்க
கோழியினைப் பாடும்வாய் குஞ்சினைப்பா டாதென்று
பாழிமொழி சொன்னபெரும் பாவலன்வாய்க் - கேழில்வெண்
முட்டைக்கும் பாட்டு மொழிவித்தாட் கொண்டதூஉம்
சிட்டர் புகழருணைத் தேசிகனை - மட்டற்ற 185
பேரருளா லாண்டு பிணிநீக்கி யின்பளித்துத்
தாரணியோ ருய்யவெனத் தன்புகழை - ஈரநறுந்
தேன்மாரி யுண்ணத் தெவிட்டாத புத்தமுது
போன்மாறி லாதுபுகல் வித்ததூஉம் - வான்மாரி
போல வரையாது போற்றுவார் யாவர்க்குஞ்
சால வருள்வழங்குந் தன்மையெலாம் - ஏல
எடுத்திசைத்துள் ளன்போ டொருபாலா ரேத்த
வடுத்தவரை யாதரிப்பான் வந்தான் - கடுக்கவின்ற
கண்டன் றிருமகனாங் கந்தன்வந் தான்மூவர்
அண்டர் முதல்வனா வான்வந்தான் - கொண்டல்வணன் 190
சிந்தைக் கினிய திருமருகன் வந்தான்போர்
விந்தைக் கினிய விடலைவந்தான் - முந்துஞ்
சிவஞான பண்டிதனாம் செக்கர்வேள் வந்தான்
பவரோக நீக்குபவன் வந்தான் - தவறாமல்
இம்மையிலே முத்திநல மீந்தருள்வோன் வந்தானென்
சும்மைமிகு சின்னங்கள் சொல்லெடுப்ப - நல்லதவ
ஞானமுனி வோர் அமரர் நானிலத்தோ ரேனையரும்
வானமதி கண்டவலை வாரிதி போல் - ஆனபே
ரானந்த வெள்ள மலைவீசி ஆர்ப்பெடுப்ப
ஆனந்த மாம்பழனி யாண்டவன் - ஆனந்த 195

அண்டர்கோன் திருவைத் தொண்டன் கண்டார்தல்

மாகத் திருவுலா வாகவரக் கண்டேனென்
ஆகத்தி லூனெலும்பு மானந்த - போகவெள்ளம்
பாய்ந்துநிறைந் துள்ளிடம் பற்றா தெழுந்துபுறம்

பாய்ந்ததெனக் கண்ணருவி பாய்ந்திழியத் - தோய்ந்தபே
ரின்பமெனைத் தென்றுநான் எவ்வண்ணம் பேசுகேன்
இன்பமய வீடதனை யிம்மையிலே - அன்பரினம்
ஆனபய பத்திவழி பாடதனி லார்வரெனு
ஞானமொழி யின்வலிமை நானறிந்தேன் - ஊன
உடலை மறந்தே னுயிரை மறந்தேன்
நடலை மனத்தையு நானென் - றிடலையும் 200
எல்லா மறந்தேன்மற் றிந்த வநுபவம்
வல்லே மறைந்து வருந்தினேன் - பல்காலம்
இன்றளவுஞ் சென்றதுபின் னென்றுவரு மோவென்றென்
றன்றுமுத லின்றளவு மாவலுளேன் - ஒன்றும்

அன்பன் இன்பவமுபவம் விழைதல்

அறியாதே னுள்ளம் அனல்மெழுகாச் செய்தான்
சிறிதேனு நாயினேன் சிந்தை - வறிதாயும்
மீண்டு மொருகாலு மேவிலன்மற் றாதலினால்
ஈண்டென் மனத்துயர மென்சொல்கேன் - காண்டகைய
காத லிளங்காளை கன்னிக்கு மாலையிட்டு
மாதவளை நோக்காமை மாண்பாமோ - பேதையரோ 205
டாடு மிளம் பருவத் தன்பருளித் தன்னுணர்ந்து
நாடுகின்ற செவ்வியினி னல்காமை - பீடுடைமைக்
கேற்றதல எம்பரம னின்பக் கலவியுளம்
தேற்றஇனி வந்தொருகாற் சேர்க்குமோ - ஆற்றவுளத்
தாசை யளித்த அருளாளன் ஆளாமல்
மோசஞ் செயவுளத்து முன்னுமோ - நேசமுடன்

தொண்டன் தன் துயரைத் தோகைக் குரைத்தல்

அத்த னவனருளே அல்லும் பகலுநினைந்
தித்தரையோர் பித்த னெனவிருந்தேன் - சித்தம்
ஒருங்கப் பெறுகிலேன் உள்ளேயென் னாதன்
அருங்கமலச் சேவடிகண் டன்பின் - வரும்பெரிய 210
இன்பப் பெருக்கி னிடைதோயேன் மாயைசெயும்
துன்பப் பெருக்கிற் சுழல்கின்றேன் - முன்பு
மகமாயை நீக்குவதில் வல்லபிரான் றிங்கள்
முகமாறு மோதியுமேன் மோன - சுகமின்னும்
வந்தபா டில்லைவலிய வினைமிடுக்குச்
சிந்தியபா டில்லை உளந் தேறவிலை - அந்தகனை
வென்றகடு வஞ்ச விழிமாத ராசைவலை

நின்று குதிக்கவிலை யாடுகொடி வீடுவய
லாசைப்பை சாச மகலவிலை - நீசர்தமைப் 215
பின்செல்கை வேண்டுபெரும் பீழை யொழியவிலை
என்னதியா னென்செருக்கு மேகவிலை - பின்னல்படு
பன்னூலிற் சிக்குப் படுமதியுந் தேறவிலை
அன்னோ இதுவோநான் ஆவதுதான் - வென்வேலோன்
சேவடியி னன்பரையுந் தீவினைகள் சேருமெனில்
யாவரினி யுய்குநர்க ளெம்பெருமான் - பாவியுளம்
வாரா திருந்திடவும் வந்து கருணைக்கண்
பாரா திருந்திடவும் பாதமலர் - சீராக
என்புன் றலைமே லிருத்தா திருந்திடவும்
வன்பின் பெரிய வழக்குண்டோ - முன்பரனார் 220
ஓங்கு குளமுளரிக் கண்ணுதித்தான் நீள்கவலை
யோங்கு குளமுளரிக் கண்ணுதியான் - வீங்குபுனற்
கங்கைக்குங் காதன்மை கண்ணினான் நாயேன
கங்கைக்குங் காதன்மை கண்ணிலான் - அங்கமலப்
பொய்கை பொறுக்கப் பொருந்தியிருந் தானடியேன்
பொய்கை பொறுக்கப் பொருந்திடான் - மைகைசூழ்
வன்னகமேன் மைக்கோயில் மன்னினா னென்னகமாம்
வன்னகமேன் கோயிலா மன்னிலனோ - அன்னை
வளைக்குளாய்க் கந்தா வடிவானான் நெஞ்ச - துளக்கமறச்
வளைக்குளாய்க் கந்தாகி வாரான் - துளக்கமற 225
சொப்பனத்தி லிந்திரன்றன் சேய்க்குறுதி சொல்லினான்
சொப்பனத்தி லும்எனக்கேன் சொல்லிலான் - ஒப்பறுதன்
தந்தைக் குவகை தழைக்கவொரு சொற்றந்தான்
சிந்தைக் குவகையென்பாற் செப்பிலான் - முந்தை
யலையாழி வற்ற வயில்விடுத்தா னுட்க
வலையாழி வற்றவுளம் வையான் - மலையதனை
நெஞ்சம் பிளந்துசிறை நீக்கினா னென்வினையின்
வஞ்சம் பிளந்துசிறை மாற்றிலான் - தஞ்சம்
அடைந்தேனுக் கென்னே அருளா திருந்தான்
உடைந்தே னுளம்வலை யுற்றேன் - மிடைந்தெரிந்த 230

ஐயனருள்வனென் றடியான் தேறல்

வானோரை வைவேலால் மாட்டியுயி ரீந்தபிரான்
ஏனோரை யாளா திருப்பானோ - வானோர்க்கு
விச்சுவரூ பங்காட்டி மெய்ம்மை யுணர்த்துபரன்

நச்சுமெமக் கின்காட்சி நல்கானோ - அச்சுதற்குச்
செம்மேனி தந்தளித்த செவ்வேள்தம் மாசழித்திட்
டிம்மையிலே செம்மைகனிந் தீயானோ - உம்மையில்
தீயரக்கன் பாசத்திற் சிக்கினரை மீட்டான்நம்
தீயவினைச் சிக்கைச் சிதையானோ - நோயினொடும்
தென்னவனார் கூனிமிர்த்த சீராள னம்பிறப்பின்
இன்னலுறு கூனிமிர்த்த வேலானோ முன்னொருத்தி 235
தன்றுயரை நீக்கிக்கை தந்துகரை யேற்றினவன்
என்றுயரை நீக்கிகை யீயானோ - அன்றொர்
வணிகன் உளத்துயர மாற்றினான் தன்னைப்
பணிவேன் உளத்துயர் பாற்றானோ - அணியிழையாய்
வெந்தவெலும் பைக்கண்ட வெங்குருவேந் தன்னெமது
வெந்தமனந் தேற்ற விரகிலனோ - சிந்துபல
வென்பிழைபொ றுத்தருளும் எம்பெருமா னின்புதல்வன்
என்பிழைபொ றுத்தருள வேனியையான் - தன்றொழும்பர்
செய்தபிழை பாராத தீரனென வுந்தமிழால்
வைதவரை வாழ்த்துபெரும் வள்ளலென்றும் - பொய்யாமல்
ஏழைக் கிரங்கும் பெருமா னிவனென்றும்
மோழைமை நீக்கு முதலென்றும் - ஏழைப்
புலவர்க் குசாத்துணையாம் புண்ணியவா னென்றும்
கலவினரைக் காத்தருள்வா னென்றும் - குலவி
யொருகான் முருகாவென் றோதுவார் சென்னி
யிருகாலும் வைத்தருள்வான் என்றும் - பெருகு
கலியில் வரதனருட் கந்தனினி யெம்மை
நலியில் விடானெனவும் நம்பி - மெலிவில்
பெரியாரை யின்றுணையாப் பேணியுளத் துன்பம்
தெரிவாகச் சொல்லிநமைத் தேற்ற - உரியான்பால் 245
தூது விடுக்கத் துணிந்தேன் களிமயிலே.

**கலபமயிலின் பலபெயர்ப் பெருமை**

மாதர்நடை கற்ற மயூரமே - சீதவளம்
மிக்கமுகில் கண்டுவகை மேவித் தழைபரப்பிப்
பக்கமவிர் செக்கர்பொன் பச்சைமுதல் - மிக்கநிறம்
ஓங்கியொளிவீச வொண்வா னகந்தழுவி
ஓங்குமரன் மேலிருக்க வுற்றழகு - தாங்கும்
நவிரமே நெய்யுந் நறும்பூவு மின்றி
தவிரா தழகுதழை கூந்த - லவிருஞ்

சிகாவளமே யாண்மை சிதையாச் சிகண்டீ
சுகாரம்ப மாமினிய தோகாய் - ஒகரமே 250
சேர்ந்தாரைக் கொல்லாது தீப்புகையு மேவாது
சார்ந்தாரைக் காத்தளிக்கும் தண்சிகியே - வார்ந்தவிசை
யின்னரம்புக் கட்டி லியையாமற் பேரன்பர்
கின்னமுள தீர்த்தருளுங் கேதாரம்! - வென்வேலின்
மின்னலெழச் சேவல் மிடற்றி னொலிமுழங்க
மன்னிதய வானத்து வந்துநிறைந் - தின்னருளைக்
கந்தனெனு நன்மேகங் காலத்திற் பெய்வதனால்
பந்தமிகு பல்லுயிராம் பைங்கூழ்கள் - சந்ததமும்
கேடின்றி யோங்கச்செய் கேதார மேயெளியேன் 255
தாடும் பெருந்துணையே நாயகமே - வாடும்புன்

ஏனைய தூதிக்கிவையிவை குறையெனல்

நெஞ்சத்தை தூது நிகழ்த்தவெனில் அன்னதுநீள்
வஞ்சத்திற் றோ்ந்ததுவேல் மன்னனெதிர் - கொஞ்சத்தில்
சேராது சேர்ந்தாலும் செம்மை பெறநிலைமை
யோராது மேலோர்ந் துரையாது - சீராகக்
கந்தனுருக் காணிற் கரைந்தழிந்து தன்னிலைமை
சிந்திமறந் தென்குறையைச் செப்பாது - முந்திப்
பலகாலு மேகுவெனப் பன்னி முயன்றும்
விலகா முயற்சியினை விட்ட - தலகைநிகர்
வன்பொறிகள் செய்யு மயக்கா லுரனழிந்து
புன்செயலின் வீண்பொழுது போக்கிற்றால் - வன்பனைவாழ்
அன்றிலினை யுய்க்கி னதுதன் பெயர்மலையை 260
யன்றெறிந்த துண்ணினைந்தே யஞ்சாதோ - அன்றியுநீள்
புல்லினத்தைச் சேர்ந்து புணர்ச்சிக்கே யுள்ளழியும்
ஒல்லுவதோ நாயகன்முன் னுய்ப்பதற்கே - மெல்லிறகின்
அன்னத்தை யேவி னதுதன்னை யாள்பிரமன்
முன்னத்த னாற்சிறையின் முன்னியதை - முன்னித்
திருமுன்னர்ச் செல்லாது செம்மையிலா வெள்ளை
பெருமான்முன் சென்றுணர்ந்து பேசா - தருமைமிகு
கிள்ளைதனை யுய்த்தாற் கிளர்பூசை யென்னிலுயிர்
விள்ளுமுயர் கோயிலினுள் மேவுமோ - தெள்ளுதமிழ் 265
வண்ணப்பா வல்ல மலர்க்கையமர் பைங்கிளிமுன்
நண்ணத்தா னுள்ளத்தே நாணாதோ - எண்ணரிய
தத்தை வழிதன்னிற் சாருந் திரும்பலரி

தத்தை யெணித்தத்தை யஃதென்பர் - நத்துமொரு
நாகணவாய் தன்னைவிடின் நண்ணுமே - யேகுகெனத்
தூதுண்டு வாழ்புறவைச் சொல்லுவதோ காரியத்திற்
றீதுண்டு பண்ணும்பின் தேரிடிற்க - போதியது
மாங்குயிலைப் போக்கவெனில் மாதா வுடன்செவிலி
தாங்கரிய கூக்குரல்யார் தாமகிழ்வர் - ஓங்குமறை 270
முன்னப் பட்டான்கண் முனியப்பட் டான்உடலம்
பின்னப்பட் டான்முன் பிடிப்பட்டே - பின்னலொடு
சின்னப்பட் டெம்மான் சினத்திற் படுமாவிற்
பின்னப் படும்பிகம்போய்ப் பேசுவதென் - இன்னிசைய
வண்டினையு மானினையும் வள்ளல்பாற் செல்கவெனில்
அண்டுபவோ வேங்கையுரு வானானை - மண்டுசுவைச்
செந்தமிழைச் செம்பொன்னைச் செப்பிவிடு வோமென்னில்
தந்தமுரை யும்பிறரே சாற்றுபவே - அந்தில்பல
பந்தப் படலும் படைத்தமையா லெம்முரையை
எந்த வகையி னெடுத்தியம்பும் - சந்தமிக 275
உண்டெனினும் வேற்றுமையு மல்வழியு மோர்வரிய
வண்டிறல்சேர் பஃறிரிபும் வாய்ந்தனவே - மண்டுநறுந்
தென்ற லுனதெச்சிற் செங்கணரா வாயெச்சில்
நன்றலவே நாயகன்பா னாமுய்த்தல் - சென்றுவர
மேகத்தைத் தூண்டவெனில் வெய்ய விடிக்குரலும்
ஆகக் கறுப்பும்வா யங்காந்தால் - வேகத்தீக்
காலுதலு முண்டினிய காலமறி யாதழகு
சாலுமொரு பாடினிதான் சார்கவெனில் - மாலாகும்
கள்ளும் கடியூனும் காதலித்துண் பேதையரை
வள்ள லெதிர்விடுத்தல் மாண்பாமோ - எள்ளப் 280
படுமிவைகள் தூதிற்குப் பண்புடைய வல்ல
நடுவறிந்து தூது நவிலத் - திடமறிவு

மயிலின் தூதேவாய்ப் புடைத்தென்றல்

பேரழகு கண்ணோட்டம் பேணுதிற லின்னவெலாம்
கூருமயி லேயுன்பாற் கூடியுள - வீரன்மேல்
ஏறி யமர்ந்தகுறிப் பேவுஞ் சொல் லிங்கிதங்கள்
வீறு திருவடிமேல் மேவு நிலை - தேறியருள்
எம்மான் றிருவுளத்துக் கேற்றநடை பெற்றனைமற்
றம்மானு நின்குறிப்பை யாதரிப்பான் - தம்மான்

தயவினிலுந் தன்னடியார் தந்தயவே மிக்க
நயமுடைய தென்றுநவில்வர் - வயமிகுந்த 285

அண்டர்கோன் மயிலின் திண்டிறன் மாண்பு

மாம யிலே நின்பெருமை நீமதிக்க மாட்டாய்கேள்
தாமறியார் சான்றோர்கள் தம்பெருமை - பூமிதனில்
வாழ்வோரில் வானகத்தில் வாழ்வோரிற் பாதலத்தில்
வாழ்வோரி லுன்புகழை வாழ்த்தாரார் - கேழ்கிளரும்
நீலக் கலாபியே நின்றோகை மேல்விரிந்தால்
ஞால முழுதுநிழல் நல்குமே - ஆலித்துன்
தோகை யுதறினதிற் றோன்றுஞ் சுழல்காற்றின்
வேகம் பொறாதிமயம் வேர்பறியும் - மாகமமர்
அண்டங்க ளத்தனையு மாராயி னோர்சிறைக்குள்
அண்டங்கள் போலடக்கு மாற்றலுளை - மண்டலைகொள் 290
பாந்தளினைப் பற்றிப் பதைக்க உதறியதால்
காந்து மணியின் கணஞ்சிதறிப் - போந்த
நெடுவான நின்றிறங்கின் நீயிறுங்கென் றெண்ணிக்
கொடுவாயிற் கொத்துதலுட் கொண்டே - யுடுவாகி
இன்னங்கீழ் வாரா திருக்கின் றனவீசன்
மின்னங்கேழ் வில்லான மேருமலை - தன்னிலவன்
பூட்டுநெடு நாண்டலையைப் பொள்ளெனநீ கொத்தியதால்
பூட்டுவிட நீண்டு பொலியுமால் - ஈட்டுவலி
மிக்கசிறை நீயுதற மேவுவளிக் காற்றாது
நெக்குரகன் சென்னி நெளிப்பதனைத் - திக்கதிரும்
பூகம்ப மென்று புகல்வார் பரிதிமதி
சோகங் கொளத்தொடர்ந்த சூளரவம் - மாகனக
மாயூர மென்றுன்பேர் வாழ்த்தக்கேட் டஞ்சிநீர்
வாயூற விட்டு வளைபுகுமால் - பாயான
சேடனை நீகொத்திச் சென்றதனால் மாலந்தோ
நாடறிய வாலமளி நண்ணினான் - ஆடல்விடங்
கண்டத்துள் வைத்தருளுங் கண்ணுதலார் செஞ்சடைமேற்
கொண்டத்தா லஞ்சாத கோளரவம் - அண்டத்தே
ஏகுங் கருடற்கண் டேண்டா சுகமாவென்
றாகுங் கருவத் தழைக்குமே - வேகமிகு 300
தோகையே நீநெடிய தூரம்வரக் கண்டாலும்
போகுமே வெண்டலையின் பொந்தினுளே - மாகருடன்
நின்னாற் புடைப்புண்டு நெக்கழுத காரணத்தால்

அன்னான் கலுழனென லாயினான் - மன்னுமலர்க்
கஞ்சத்தான் ஊர்தியுனைக் கண்டுமிக அஞ்சியதால்
அஞ்சப்பேர் பெற்றதனை யாரறியார் - விஞ்சப்பேர்
பெற்றநின தாற்றலெவர் பேச்சுக் கடங்குமது
நிற்கநின தேர்க்கு நிகருண்டோ - பொற்கலபம்

மணிநிற மயிலின் அணிநடம் புகழ்தல்

வட்ட வடிவாக வளைந்துநீ யாடுங்கால்
கட்டழகுக் குள்ளங் கரையாரார் - இட்டமுடன் 305
நீல முகிலெழினி நேர்வீழ்த்தி நீநடிக்கும்
கோல முளநெகிழ்க்கக் கோவிமையோர் - சாலமலர்க்
கண்மாரி பெய்வதனைக் காசினியோர் தேற்றாது
விண்மாரி யென்றே விளம்புவரால் - கண்ணுதலார்
தாமே நினக்கொப்புத் தாண்டவத்தில் ஈண்டுமெழில்
வாமே கலையார்கள் வாஞ்சித்துத் - தாமேக்கற்
றெத்தனைநாள் கற்றாலு மின்னங்கை வாராமல்
இத்தரையில் மெல்லியரென் றேச்சுற்றார் - மெத்துசினக்
காளிநட மாடியொரு காலெடுக்க மாட்டாமல்
வாளிமுகந் தாழ்த்தவையில் வைகினாள் - நீளிமயப் 310
பூம்பாவை நாடறியப் பொன்மன்ற மேறிடினும்
கூம்பாதெம் மானடமே கும்பிட்டுத் - தாம்பார்வை
வாங்காமல் நோக்கியினும் வைகினாள் தானடிக்கப்
பாங்கான வாற்றலினும் பற்றாமல் - பூங்கமலை
எய்யாமல் மாறிப்பல் இல்லந்தோ றாடியுமென்
செய்யா ளெனும்பெயரே சேர்ந்தாளால் - ஒய்யாரத்
துன்னைப்போ லாட லுஞற்ற முடியாமல்
அன்னத்தைப் போல்வெளுத்தா ளக்கலைமான் - நின்னோர்
நடையே பயின்றும் நடைகைகூ டாமல்
இடையே யரம்பை யிளைத்தாள் - தொடைவேலோன் 315
மேலாக நீவிளங்கும் மேம்பாட்டுக் கொப்பாரு
மாலாக நாட்காலை மாலைதொறும் - மாலாழி
செங்கதிரை யோங்குந் திரைமேற் சுமந்தியலா
தங்கம்வெதுப் புற்றே யரற்றுமே - பங்கமிலா
மாதையன் மானாருன் சாயல்தாம் வாஞ்சித்தும்
பேதையரென் றெள்ளத்தான் பெற்றாரே - மேதைமிகு

கண்ணெழின் மயிலின் புண்ணியப் பெருமை

கேகயமே யுன்போலக் கேடில்லா மாதவமெவ்
யோகருக்கு மெய்துவதோ வொண்சுவைய - பாகுமொழி
மாலிமய வெற்பன் மடமயிலு முன்னுருவாய்
ஏலியம மாதிதவ மீங்கியற்றி - மேலினிய 320
சங்கரனார் பொங்கினருள் சார்ந்தனள்பின் னும்மவர்தம்
பங்ககலா மேலாம் பதம்பெற்றாள் - பொங்குமலர்ச்
சாகை பரப்பிநெடுந் தண்முகில்சூழ்ந் துன்வடிவ
மாகையொடுன் பேர்படைத்த வாதரவால் - மாகமுயர்
குன்றமெலாங் கோயிலாக் கொண்டான் குமரனுனை
யன்றி யவற்கினியார் யார்மயிலே - குன்றருவி
யார்ப்ப நடந்தனைய யானை தகர்முதலாப்
போர்ப்பரிகள் பெற்றிருந்தும் புண்ணியன் - காப்பதற்கு
மெய்யன்பர் முன்னர்வரும் வேளையெலா நின்மேலாக்
கையின்வடி வேலோடும் காட்சிதரும் - செய்ய 325
மணிநாவில் வேலு மயிலு மெனுஞ்சொற்
கிணையான மந்திரந்தா னேதோ - பணிவோடு
மாமுருகன் பேரை மறந்தாலு முன்பெயரைச்
சேமநினை வார்மறவார் செஞ்சொல்லின் - பாமகிழ்வா
லாடும் பரிவே லணிசேவ லென்றுருகிப்
பாடும் பணியிற் பணிக்கவென - நாடும்
அருணகிரி பாடும் அநுபூதி முன்னர்
வருமகிமை யுன்றனக்கே வாய்த்த - துருவாய்
அருவாய் உளதா யிலதான கந்தன்
குருவாகி வந்து குறைகள் - ஒருவிப்போர் 330
அன்பருடான் நல்கிமூ வாசைத் தொடரறுத்துப்
பின்பநு பூதி பெறுவித்த - துன்பெயரைக்
காதலுடன் பாடியதோர் காரணமே கேகயமே
ஓதலுள னுன்பெயர்நா னுள்ளருகி - யாதலினால்
என்குறைக்கு நீயிரங்கி எம்மா னிடந்தூது
சென்றுவரல் வேண்டுமுனைச் சேர்ந்தோரை - என்றும்

பணிபவர்க் கருள லணிமயிலியல்பு

பரிந்தளித்தல் நின்னுடைய பண்பன்றோ வேந்தன்
தெரிந்தசபை முன்னருணைச் செம்மல் - வருந்தலறத்
தேவர் பெருமாளைச் செவ்வியுறக் கொண்டுவந்து
தாவில் புகழ்படைத்த தாளாள - ஆவலினால் 335

கொண்டுவா விங்கு குமாரகம் பீரனையென்
றண்டமிழ்கேட் டவ்வண்ணம் சாதித்துக் - கண்தெரியா
முத்து வயிரவன்றன் முன்காட்சி தந்தருளும்
சத்தி படைத்தவனீ தானன்றோ - அத்தனுன்
மாற்றந் தனைத்தள்ள மாட்டானிஃ தியாவர்க்கும்
தேற்ற மினிய சிகாவளமே - ஆற்றவும்
தானே தயவுடைய சண்முகன்பாற் காலத்துன்
போனேயர் என்குறையைப் போய்ப்புகன்றால் - நானேயம்
வைத்தளியே னென்று மறுப்பானோ தொண்டர்தமைத்
தத்தளிக்க விட்டுச் சகிப்பானோ - மெத்துசின 340
மாயைதன் சேய்க்குந்தன் மாட்சியுருக் காட்டியவன்
நேயருக்குத் தன்காட்சி நேரானோ - மாயைக்
கொடுமை களையவல கொற்றவனென் பாசக்
கொடுமை களையவருள் கூர்வான் - நெடுமொழிசொற்
றேசும் புலவர்பா லின்னலுறுத் தன்னவர்தம்
மாசில்கவி பெற்றருளும் வண்மையான் - கூசுமுளத்
தன்போ டியான்புனைய லானதமிழ் மாலையையும்
இன்போடு தன்றோளி லேலானோ - முன்பு
குழறிக் குழறிக் குமரனைப்பா டென்னும்
பழமொழியுங் காயாகற் பாற்றோ - குழகனினித் 345
தள்ளா தெளியனையுந் தாங்குவான் நீகுறிப்பின்
கொள்ளே லிதிலையம் கோன்முன்னர்த் - தெள்ளும்
உருவகதா ளத்தினீ யாடி லுருகி
உருவகத்தி லுன்ன லுணர்வான் - பெருமான்முன்
ஆதியெனுந் தாளத்தி லாடினா லின்றுணைநீ
யாதியென வேண்டு மதையறிவான் - தீதிலாச்
சம்பையினி லாடிற் சனனப்பை மேவுமொரு
வம்பைத் தவிர்க்கும் வழியருள்வான் - நம்பும்
திரிபுடையி லாடிற் றிரிபுடைய மாயைத்
திரிபுடையச் சீரருள்கள் செய்வான் - திரிவின்றி 350
மட்டிமத்தி லாடினால் மட்டிமையை நீக்கியருட்
சிட்டர் குழுநடுவே சேர்த்திடுவான் - நட்டம்
துருவத்தி லாடினால் றொல்லைவினை தீர்த்துப்
பெருநிலையில் வைத்தெம்மைப் பேணிக் - குருவாகி
வந்தருளி வாழ்விப்பன் மாமயிலே நீயுவந்து
சந்தமொடு முன்நடித்துச் சண்முகனை - முந்தி

மகிழ்வித்து நல்லமயம் வாய்த்தென் குறையைப்
புகழ்வித் தகத்திற் புகன்றால் - துகிரனைய

நன்றிமறவேனெனத் தொண்டன நவிலல்

செஞ்சிறிய கால்விரிந்த தோகை மயிலேறே
நெஞ்சிதனி லிவ்வுதவி நேர்நினைவேன் - தஞ்சாய் 355
உயிருதவி செய்தாரை உள்ளளவும் போற்றல்
மயர்வறுநன் மேலோர் வழக்காம் - இயலிசைதேர்
அண்ணா மலைப்புலவ னாராமை யாற்புகன்ற
பண்ணார் மயில்விருத்தம் பாடுவேன் - எண்ணார
ஆதவனு மம்புலியு மாதிவரு சீர்வகுப்பும்
ஆதரவிற் பாடிமகிழ்ந் தாடிடுவேன் - கோதறுசீர்
வண்ணச் சரபன் மயிலலங்கா ரஞ்சொல்லி
யுண்ணெக் குருகி யுனைப்புகழ்வேன் - உண்மைப்
பரிபூர ணானந்த போதம் பகர்ந்த
பரிபூர ணானந்த பவ்வம் - அரிதாம் 360
தகரா லயத்தின்சீர் சாற்றுமுழு ஞானி
குகனார்க்கே யுள்ளங் கொடுத்தோன் - அகமார்
திமிரவிருள் நீக்கியருள் சித்தாந்த பானு
குமரகுரு தாசனுனைக் கூறும் - தமிழ்நலஞ்சால்
கன்மனமு நீராக்கும் கற்கண் டினைப்பழிக்கும்
பொன்மயிலின் கண்ணிசொலிப் போற்றுவேன் - கன்மவினைக்
கட்டறுக்கு ஞானக் கதிர்வேற் பெருமாற்குத்
திட்டமுற என்கருத்தைச் செப்புவாய் - தட்டறவே
பல்லுயிர்க்கு நல்லுயிராய்ப் பாங்குபயின் றுள்ளமர்ந்த
தொல்பரமற் கியாம்விரித்துச் சொல்வதென் - மெல்லவெம 365
துள்ளத் திருந்து மொளித்தபெருங் கள்வனுக்கு
வெள்ளை மதியேன் விளம்புவதென் - வள்ளலே

தொண்டன் தன் குறைசொல்லி விடுத்தல்

வாழையடி வாழை எனவாழ் வழியடிமை
ஏழைத் தொழும்ப னிவனொருவன் - மோழைமையாற்
குற்றமொரு கோடி குயிற்றிடினு நின்னடிக்குக்
குற்றங் குயிற்றக் குறித்தறியான் - கொற்றவனே
உன்னை யொழிய வொருவரையு நம்புகிலான்
பின்னை யொருவரையும் பின்செல்லான் - உன்னடியார்
பொன்னடிகட் கென்றும் பிழைசெய்யான் அன்னவர்கள்
சொன்ன பணிபுரியச் சோர்வடையான் - முன்னைப் 370

பரம்பொருளும் பல்லுயிரும் பண்ணும் வினையும்
நிரந்த கதிவகையு நேரார் - அரந்தைதரு
கூட்டத்துட் கால்வையான் கோதில்சரி யாதிகழ்
ஏட்டைக் குறும்பர்குழு வெய்திடான் - வீட்டினைப்
பொன்னை மணியினைப் பொற்றொடியார் பொய்ம்முயக்கை
அன்னத்தை யாடை யணிகலனை - என்னவெனத்
தேடித் திரிந்து திரட்டித் தொகுத்துவைத்
தீடழியுந் தாம்பிரம மென்றுரைக்கும் - கேடர்மொழி
கொள்ளான் இரண்டொன்று கூறிக்கைக் குத்திடுவார்
நள்ளான் பொய்ஞ் ஞான நயந்திடான் - கள்ளமாய்த் 375
தன்னை மறைத்த தமமான வாணவமும்
கன்மத் தளையும் கழன்றுபெரும் - வன்மாயைப்
பேயைத் துரத்திப்பின் பேசா வநுபூதி
ஏயப் பெரிதுநசை யெய்தினான் - நீயான
ஞான விநோத நலமே விரும்பினான்
ஊனந் தவிர்த்தாளல் உன்கடன்காண் - தீனர்பால்
ஓங்குங் கருணை யுடையானே அவ்வடியான்
தீங்கெவையு மோர்பொருட்டாச் சிந்தைகொளேல் - ஈங்குவா
என்னடிமை நீயென் றிசைத்தவனை யாட்கொண்டுன்
பொன்னடிகள் சென்னிக்குப் பூவாக்கி - முன்னை 380
வினைமாசு நீக்கியடி மெய்ஞ்ஞான மாக்கி
யெனதியான் எனுஞ்செருக் கின்றி - நினையே
யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிமெய் யின்பம்
புணர்ந்து பிரிவு புணரா - திணங்குமலர்த்
தாடலைபோ லோவாத தத்துவசுத் தாத்துவித
நீடனுப வத்தி னிலைநிறுத்தி - யாடகத்தின்
மாடுமனை மக்கடமின் வாழ்வின் மயங்காமற்
கேடுவிளை நல்குரவு கிட்டாமல் - ஏடவிழுங்
கூந்தலினார் காமக் குழியில்வீழ்ந் தாழாமல்
தீந்தமிழ்ப்பா விற்றுத் திரியாமல் - சேந்தநின 385
தின்புகழ் நூலன்றி யேனைப்புன் னூலோதிப்
புன்பொழுது போக்காமற் பூசனையு - மன்புமிகு
நல்ல செபஞ் சேவடியி னாட்டமுத லாயநலம்
வல்லைபெற வந்து வரமருளி - யெல்லையில்பே
ரானந்த வீடு மவனுக் கருள்புரிக
ஆனந்த ரூபமுரு கையனே - ஊனமிலாச்

சத்தேசித் தேயோஞ் சதாசிவமே யென்றுரைத்துச்
சித்தேசன் நல்லருளைச் சேர்ப்பிக்கச் - சித்திரநீள்
தோகைக் குடைவிரித்துத் தோமில் நிழல்பரப்பிப்
பாகுமொழி யன்னையர்கள் பக்கமுற - வாகைபுனை 390
ஞானவடி வேல்வலக்கை நண்ணமுரு கேசனைப்
பானல்வாய் ஞானம் பரிமளிக்கும் - மோன
பரமகுரு நாதனைப் பண்ணவர்தம் கோவை
வரதனைமெய் யன்பர்தமை வாழ்த்தும் - விரதனை
மாணிக்க வண்ணனை வண்பவளத் தின்றிரளை
ஆணிக் கனகத்தை யாரொளியைப் - பேணுநரைப்
பேணிப் பிறப்பிறப்புப் பேராழி நீக்கியருள்
தோணியை முத்தியினைத் துய்க்கவிடும் - ஏணியை
அன்பர்க் கிருதிநியை யாரமுதை யோர்முக்கண்
இன்பக் கரும்பி லெழுஞ்சாற்றைத் - துன்பமற 395
வேததரு மீது விளையு நறுந்தேனைத்
தீதகலு மெய்ஞ்ஞானத் தீங்கனியைச் - சோதி
யயில்வே லருட்பழனி யாண்டவனை யென்பால்
மயிலே விரைந்தழைத்து வா.

வெண்பா

வேண்டவனைத் துங்கொடுக்கும் வேலவனைச் சீலருளத்
தாண்டவனைத் துங்கமிகு தண்பழனி - யாண்டவனைச்
சின்மயனை யின்றுணையைச் செவ்வேளை யிவ்வேளை
பொன்மயிலே கொண்டன்பாற் போது.
தோகைமயி லேறியிரு தோகையர்கள் பாலமர
வாகைபுனை வேலை வலத்தேந்தி - யோகையொடும்
வந்தடிமை சிந்தைகுடி வாழ்பழனி யாண்டவர்
பந்தவினை தீரருட்கண் பார்.

ஞானசம்பந்தன் நற்கழல் வாழ்க.

பழனியாண்டவர் மயில்விடுதூது முற்றிற்று.

# குறிப்புரை

## எண் - கண்ணி எண்களைக் குறிக்கும்

1. **பூமேவுமாது** - திருமகள்; **நாமேவுமாது** - கலைமகள். **கோ** - கண். **யாக்கை** - உடல்.

2. **ஆக்கத் தேவாதியர்** - மேன்மையுடைய தேவர் முதலியோர்.

3. **நெறியால் அறிவை அறியும் அறிவர்** - பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அன்றி பதிஞானத்தால் அவனருளே கண்ணாகக் கொண்டு ககண்ப.

5. **நோன்மையுற** - வலிமை பெற; மலநோய் நீங்கி ஆன்மலாபம் பெற. **நோன்றெடுத்த தாய்** - தவம் செய்து பெற்ற தாய்; வயா நோய் முதலியன அனுபவித்துப் பெற்றதாய்.

8. **கலவி** - பிறிவரும் அத்துவிதமாகி.

9. **ஏந்தல்** - தலைவன்

12. **ஆக்காத ஆக்கை அழியாத இளமை** - முருகப் பெருமான் அருளால் கொண்ட திருமேனியாதலால், ஆக்காத ஆக்கையும் அழியாத இளமையும் தெய்வமணமும் (முருகு) கொண்டதாம். **தூக்கு** - வேதம்.

13. **தேக்கரும்பர்** - மன்மதன்; **காலழகு** - எண்ணாயிரங்கோடி மன்மதர்களின் அழகு ஒன்று சேர்ந்தாலும் பழனியாண்டவனின் (திருவடி) காலழகுக்கும் கூட ஒப்பாகாது. அவர்களின் முழு அழகு இவனின் 1/4 அழகுக்கும் ஆகாது.

14. **தாடாளன்** - பேராற்றலுடையவன்.

15. **பூங்கால்** - மென்மையான கால்; அழகிய கால் குழந்தையின் காலாதலின். **தெண்டன்** - தண்டம், பணிவுடன் கூடிய வணக்கம். **செம்பொருள்** - செவ்விய பொருள். குறள் 258 பரிமேலழகர் உரை காண்க.

16. **விண்டு** - விஷ்ணு. **குறுக்கும்** - குறுகச் செய்யும். **கலசமுனி** - அகத்தியர். (குற்றாலத் தலபுராணம்)

18. **கொான்** - மிகுதி, பெருமை.

19. **குற்சிதம்** - வெறுப்பு. **உயிர் நற்குகை** - தகராகாசம். குகன் என்ற பெயருக்குக் காரணம்.

21. **இயவுள்** - தேவர். **பத்தித் தரம்** - அன்பின் மேன்மை **சன்மவிடாய்** - பிறவி வெப்பம். கோடை வெப்பம் தாங்காதவர் மலைவாசத் தலங்களுக்குச் செல்வதுபோலப் பிறவி வெப்பந் தாங்காதவர் சென்றுசேரும் குன்றம் திருப்பரங்குன்றம்.

22. **தரளம்** - முத்து. **நந்து** - சங்கு. **அலைவாய்** - கடற்கரை.

23. **சித்தர் குழாம் வந்தித்து ஒருவா** - சித்தர்கள் வணங்கி நீங்காது; **இனம் குடில் உய்க்காது கா** - எங்கள் கூட்டத்தை பிறப்பில் புகுத்தாது காப்பாயாக.

24. **நீரகத்தால்** - அன்பெனும் ஈரம் உடைய உள்ளத்தினரால்.

25. **ஏனல்** - தினை. **கொண்டல் இனம்** - கார்மேகக் கூட்டம். **சூல் நிறைந்து**

- மழைக் கருக்கொண்டு.

29. முன்னாம்.. .. .. சேரர் - முடியுடை மூவேந்தர்களில் முன் வைத்து எண்ணப்படும் சேரர்.

29-33. சேரமான் பெருமாள் நாயனார் பற்றிய செய்திகள். முனைப்பாடி முதல் - சுந்தரமூர்த்தி நாயனார். முதல் தெய்வ உலா - திருக்கயிலாய ஞான உலா. உலாப்பிரபந்தங்களில் முதலில் தோன்றியது. ஆதலால் ஆதி உலா என வழங்கப் பெறுவது.

34. நய்தலிலா - நலிதல் இல்லாத. சையம் - மலை. மாது இவர் ஆகம் - பெண் ஒரு பாகம் ஆகிய உடம்பு. மலை வில்லி - மலையை வில்லாக ஏந்தியவர்.

35-38. கோங்குவனம், உமையவள் தவம் செய்த கூவிளவனம், திருமகள் வீற்றிருந்த குளிர்பொழில், தேவர் ஆவும் (காமதேனு) இன்னும் (சூரியன்) தவம் செய்த நெல்லிவனம் கூர்ச்ச வனம் என்பன பழனியம்பதியில் உள்ள சோலைகள். கோங்கு - ஒருவகை மலர்; மாதர் நகிலுக்கு உவமை. சே - ஒருவகை மரம்; காளை. கூவிளம் - வில்வம்.

40. ஆலை - கரும்பு

41. நெட்டை மடல் - நீண்ட தென்னங்கீற்றுகள்.

42. வாழைத் தாருக்கு யானை முகம் உவமை.

43-44. கோட்டுப்பூக்கள்.

45. கொடிப்பூக்கள்.

46. நீர்ப்பூக்கள்.

52. இர வணமாம் ஆசை : இருள் மயமாகிய (அஞ்ஞானமாகிய) ஆசை.

54. தோம் - குற்றம்.

55-57. கணபதிக்கு மாங்கனியை அளித்தமையால் ஊடிக்கொண்ட குமரனை மாதேவன் சமாதானப்படுத்திய மொழிகள்.

59. கொத்தடிமை - குடிமுழுதும் மீளா அடிமைகளாக வாழ்தல்.

60. நிகமம் - வேதம்.

73. திருவனுக்ஞை - திரு ஆணை.

74. சவிக்கயிலை - ஒளிமிக்க, பிரகாசமான கயிலை.

81. ஓங்கல் தமை - இருகுன்றுகளையும்.

82. அசலம் அசலமேயாக - அசலம் - அசையாதது. மலை பெயருக்கேற்றபடி அசையாமல் நிற்க.

83. சிவப்பேர் அசலம் - சிவகிரி. பழனிக்கு மற்றொரு பெயர்.

85. ஆனி. ஹானி - குற்றம், கேடு.

93. மூரி மத வெற்பு - மதம் பொழியும் வலிய களிறு.

94. சற்பம் - பாம்பு. கற்புக் கொடிகள் கஞலும் மலை - கல்லைப் புக்குக் கொடிகள் சுற்றும் மலை. பாறைகள் மீது கொடிகள் சுற்றிப் படரும் மலை.

94-97. பழநி சிவரூபம்.

*100.* **துங்கம்** - மேன்மை.

*102-104.* படிக்கின்றிலை எனத் தொடங்கும் கந்தரலங்காரப் பாடலின் கருத்து.

*105.* **தாழ்வரை** - அடிவாரம்.

*106.* **தொப்பணம்** - தோப்புக்கரணம்.

*111.* **மஞ்சு** - மேகம்.

*112.* **சலதி** - கடல். **இல்லாள்** - மனைவி.

*118.* **பன்னிட** - பலமுறை கூற.

*119.* **கப்பூரம்** - கற்பூரம். **திப்பியம்** - திவ்வியம், இனிமை.

*125.* **மட்டற்ற** - அளவற்ற.

*144-146.* 'தாவடியோட்டும் மயிலிலும்' 'சேல்பட்டழிந்தது' எனத் தொடங்கும் கந்தரலங்காரப் பாடல்களின் கருத்து.

*155.* **விற்பருதி** - ஒளிமிக்க சூரியன்.

*155-6.* திருமுருகாற்றுப்படை வரிகள் 1-2 சீர்பாத வகுப்பு வரிகள் 1-2 ஒப்பு நோக்குக.

*162.* **தாயில் இனியன்** - தாயினும் மிக்க இன்பம் அளிப்பவன்.

*165.* பெட்ப - விரும்ப.

*170.* **துரகம்** - குதிரை. **மாகம்** - ஆகாயம்.

*172-3.* 'தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானை" முதல் திருமுறைப் பாடல் ஒப்பு நோக்குக.

*175.* **புவனங்கடந்தோன்** - திசைமுகன், பிரமன்.

*176.* கொன்றகர். கொன்+தகர். வலிய ஆடு.

*177.* **கவுஞ்சம்** - கிரௌஞ்சம் தீமைகள் பலவும் உடைய கிரௌஞ்சமலை.

*181.* மலையிற் சிறைப்பட்ட மாப்புலவன். நக்கீரர்.

*182.* **மாது அத்தம்** - பெண்ணின் கை. முருகம்மையாரின் வெட்டுண்ட கையை வளரச் செய்த வரலாறு.

*183-5.* பொய்யாமொழிப் புலவர் வரலாறு.

*193.* **சும்மை** - பேராரவாரம்.

*198.* திருவேளைக்காரன் வகுப்புக் கருத்து.

*199-201.* தொண்டன் பெற்ற அனுபவம்.

220. முளரிகுளம் - நெற்றி; முளரி - தாமரை, நெருப்பு - நெற்றிக்கண். கவலையோங்கு குள முளரி - கவலையால் சிதைவுற்ற உள்ளத் தாமரை. காதன்மை - மகன்மை.

**221. நாயேன் அகம் கைக்கும் காதன்மை கண்ணிலான்** - என் அகம் கைக்கும் தன்மையை (மனசஞ்சத்தை) ஒழித்தலை நினையான்.

223. மை கைசூழ் வன் நகம் மேன்மைக் கோவில். மை - கருமை. கருமேகம். **கைசூழ்** - பக்கங்களில் சூழ்ந்த. **வன் நகம்** - வலுவான மலைகள். **என் அகமாம் வன் நகம்** - என் நெஞ்சமாகிய வலிய பாறை.

**224. கந்த வடிவானான்** - திரண்டவடிவானான். **கந்தாகி வாரான்** - பற்றுக்கோடாகி வாரான்.

**225. துளக்கம் அற** - நடுக்கம் அற.

**227. உட் கவலை ஆழி** - மனக்கவலையாகிய கடல்.

229. 'ஏதுபிழை செய்தாலும்' எனத்தொடங்கும் திருப்போரூர் சந்நிதிமுறைப் பாடல் கருத்து.

239. வைதாரையும் அங்கு வாழவைப்போன் எனும் கந்தரலங்காரப் பாடல் (22) கருத்து.

**241. மாழைமை** - அறியாமை. மூடம்.

242-243. "எருவாய்க் கருவாய்" எனும் திருவீழிமிழலைத் திருப்புகழ் காண்க.

**248. நவிரம்** - மலை. மயிலுக்கும் பெயர். சிலேடைப் பொருள்.

**249. சிகாவளம்** - சிகை. கூந்தல் வளமான செழித்த கூந்தல். மயிலுக்குச் சிலேடை. **சிகண்டி** - பேடி, மயிலுக்குச் சிலேடை.

**251. தண் சிகி** - குளிர்ந்த நெருப்பு. மயிலுக்குச் சிலேடை.

**252. கேதாரம்** - ஒரு இராகம். மழை மேகம். மயிலுக்குச் சிலேடை.

**259. அலகை** - பேய். **உரன்** - வலிமை.

260-1. 'அன்றில்' வடமொழியில் கிரௌஞ்சம். அன்றில் வடிவாயிருந்த தமையின் கிரௌஞ்சகிரி எனப்பட்டது.

**264. பூசை** - பூனை. வழிபாடு.

**265. வண்ணப்பா வல்ல மலர்க்கையமர் பைங்கிளி** - கிளி வடிவான அருணகிரிநாதர்.

**266. தத்தை** - கிளி. இடையூறு, கண்டம்.

**267. தூது** - கல். **கபோதி** - பார்வையற்றவன்.

270-2. முன்னப்பட்டான் - சிவபெருமான். கண்முனியப்பட்டான் உடலம் பின்னப்பட்டான் - சிவனுடைய கண்ணால் சினக்கப்பட்டு, உடலம் எரியுண்ணப்பட்டான், மன்மதன். குயில், மன்மதனின் உலாவில் அவன் முன்னர் ஊதப்படும் எக்காளம்.. மாவின் பின்னப்படும் - மாமரத்தைப் போலச் சிதையும்,

**273. வேங்கை** - புலி, வேங்கை மரம்.

**283. இங்கிதம்** - குறிப்பு.

**284. ஆதரிப்பான்** - ஏற்றுக் கொள்வான்.

**285. வயம்** - வலிமை.

285. 'தன்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ' (திருவாசகம், திருச்சாழல் 19)

287. 'ககனகூட முமேலை முகடுமூ டியபசுங் கற்றைக் கலாப மயிலே' மயில்விருத்தம் 6.

288. பார்க்க மயில் விருத்தம் 4

**290. மண்தலைகொள் பாந்தள்** - பூமியைத் தலைமீது தாங்கியுள்ள

ஆதிசேடன் எனும் ஆயிரந்தலையுடைய பாம்பு. மணியின் கணம் - நாகமணிக் கூட்டம். இறுங்கு - சோளம்.

292. கொடுவாய் - வளைந்த வாய், கொடியவாய். உடு - விண்மீன்.

293. மின்னம் கேழ் வில் - மின்னலைப் போல ஒளி வீசுகின்ற வில்.

தன்னில் அவன். பூட்டு நெடு நாண் - நாணாகப் பூட்டிய வாசுகிப் பாம்பு. மேருமலை நிமிர்ந்திருப்பதற்குக் காரணம்.

294. ஈட்டு வலி - திரண்ட வலிமை. பூகம்பத்திற்குக் காரணம்.

302. கழுழன் - கருடன். கலுழ்பவன் கலுழ்தல் - அழுதல்.

303. கஞ்சத்தான் - கஞ்சம் தாமரை. தாமரையான் பிரமன். ஹம்சம் அன்னம். தமிழில் அஞ்சம். அஞ்சுவது அஞ்சம். அச்சப்படுவது எனக் காரணப் பெயராயிற்று.

306. நீல முகில் எழினி - கார்மேகமாகிய திரை. கோ இமையார். கோ - கண். தேவர்கள். மழைக்குக் காரணம் கற்பிக்கப்பட்டது.

308. ஏக்கற்று - ஆசையால் தாழ்ந்து.

309. ஏச்சுற்றுறார் - பழிக்கப்பட்டார்.

310. வாளி முகம் - ஒளிபொருந்திய முகம். தாழ்ந்து - நாணி. வைகினாள் - நின்றாள்.

311-12. சிவகாமியம்மை நடனங்கண்டு நிற்றலுக்குக் காரணம் கற்பித்தவாறு.

313. செய்யாள் - சிவந்தவள், திருமகள். ஒன்றும் செய்யாமலிருப்பவள் என்றும் பொருள்.

314. தோற்றலால் மேனி வெளுக்கும்.

318. பேதையர் - அறிவற்றவர்.

319. கேகயம் - மயில்.

321. சாகை - கிளை.

322. ஆதரம் - ஆசை.

330. ஒருவி - நீக்கி.

335. என்றண்டமிழ் - என் தண் தமிழ்.

338. மாற்றம் - சொல்.

338. சிகாவளம் - மயில்.

341. மாயைதன் சேய் - சூரபன்மன்.

342. 'மகமாயை களைந்திட வல்ல பிரான்' கந்தரனுபூதி.

367. ஏழைத் தொழும்பன் - அறிவின்மையும் இழிதொழிலும் உடையவன். மோழைமை - மடமை. முன்புசொன்ன மோழைமை யால் முட்டை மனத்தீரே (தேவா. 188, 8).

371. அரந்தை தரு கூட்டம் - சிற்றினம். அரந்தை - துன்பம்.

372. ஏட்டைக் குறும்பர் - தரித்திரம். அறிவற்ற தரித்திரத்தால் செய்யும் குறும்பு. 'ஏட்டைப் பருவத்து மிற்பிறந்தார் செய்வன' (நாலடி, 358). 2.

உ

சிவமயம்

தடாகம் ஸ்ரீமத் திருமுடி சுவாமிகள்

# நெஞ்சுவிடு தூது

தஞ்சநமக் காகுந் தடாகத் திருமுடிபால்
நெஞ்சுவிடு தூது நிகழ்த்துவேன் - அஞ்சலித்தே
ஆரணச்சி லம்பணிந்த வைங்கரத்து மும்மதத்து
வாரணத்தின் செந்தாண் மலர்.

## வழிபடு கடவுள் வணக்கம்

### கலி விருத்தம்

வம்பொன்று மதவாதியர் வழியொன்றி யுழலாமலே
அம்பொன் செய்சடை யீசனாரருளொன்று நெறிமேவவே
எம்பந்த வினையோடவே யினிதென்ற னுளமாகுமே
சம்பந்த சரணாலயஞ் சம்பந்த சரணாலயம்

## நூல்

மணிகொண்ட வேலா வலய மருங்குற்
கணிகொண்ட மேகலையா வார்த்துப்- பணிகொண்ட

மாமணிசேர் சென்னி வளவரங்கி லாடுகின்ற
பூமகடன் மார்பிற் புரளொளிசேர் - தாமமோ

கோலப் புளகிதமார் கொங்கைமே லிட்டவெழில்
நீலப்பட் டாடையோ நேரென்னச் - சீலத்தாற்

பொய்யைமலை மேன்மைப் பொதிகைமுனி குண்டிகைநின்
றுய்ய வுதித்துதக மொண்மலருங் - குய்யைமலை

சாந்து மகருந் தடவரைத்தேன் மான்மதமும்
காந்து மணிபலவுங் கையரிக்கொண் - டேந்தியிள 5

முல்லையா னைந்துமுகந்தலைக்கை யாலாட்டி
யெல்லையிலா நற்றலஞ்சென் றேத்தியே - யல்லைக்

கருமுகிலை வென்ற களத்தா னருளாற்
பெருகியமு தூட்டிப் பெருக்கி - யுருகுமுளத்

தாயிற் சிறந்துலகைத் தான்புரந்து காத்தறொழி
லாயிந் திரனா டதிசயிப்பத் - தாயித்

திருக்கா விரிபாய்ந்து சேணாடு நாணத்
திருக்கா விரிகரையிற் சீர்த்த - திருச்சோழ

நாட்டிற் பராபரனார் நண்ணுந் தலங்கடமிற்
பாட்டிற் சிறந்த பரிசிற்றாய் - வேட்டன் 10

றராப்பள்ளி காணவரியா னுறையுஞ்
சிராப்பள்ளி தன்னிற் செனகர் குராப்பள்ளி

மட்டுவார் கூந்தலொடு மாதுருபூ தேசுரரை
யிட்டுமல ரேத்துதவத் தேவந்தான் - எட்டிவரு

கூற்றை யுதைத்த குரைகழலே போற்றிமுடை
நாற்ற வுடலினினி நண்ணாமே - யேற்றி

யிருண்முடிய ஞான மிலகச் சுமக்குந்
திருமுடிநற் பேராற் சிறந்தான் - அருளுவச்

செவ்வந்தி மேனிச் சிவனை யுழுவலன்பாற்
செவ்வந்தி நற்கோயிற் சென்றன்பாற் - செவ்வந்திப் 15

போதுங் கமலமும் போதவிட்டுப் பூசித்து
மாதுங்கப் பாக்களால் வந்தித்தல் - ஓதுநன்

னேமமாக் கொண்டே நிகழ்ந்தான் குடிகெடுக்குங்
காமமுதல கடிந்தவிர்ந்தான் - நாமப்

பிறவிப் பெருங்கடலை நீந்தலெனும் பெட்பே
யுறவிக் குவலயத்தே யுண்மைத் - துறவித்தோற்

றோணியாஞ் சற்குரவன் றோன்றுவதெக் காலமவற்
காணியவெந் நாளிலந்தோ கைவருமென் - றாணி

பசுமரத்த றைந்த படியன்பாய் வாழ்நாள்
வசவனைய ளித்தவல்ல மன்போல் - அசைவறநே 20

சித்தவன்முன் றோன்றினான் றிம்மப்ப வீரசைவன்
சித்தவன்ம லத்திரளைச் சேதிக்குஞ் - சித்தன்கண்

டாதுலனற் சங்கநிதி யண்மையிற்கண் டாலென்ன
மாதுயர நீங்கியடி வந்தித்துப் - பாதி

யுமையா ளகமறைத் தோருருக் கொண்டே
யெமையாள வந்த விறைவா - அமையா

தலைக்கும் பிறப்பகற்றி யாட்கொளெனப் போற்ற
நிலைத்தவருட் டிம்மப்ப னோர்வான் - அலைக்கங்கை

தங்குதிருச் சென்னியான் றங்கி விளங்கு திருக்
கொங்கிலுயர் தென்கயிலைக் குன்றொன்றுண் - டங்குநாம் 25

செல்வெம்சின் னாளிலங்குச் சேர்வாயே னின்பாசங்
கொல்வேமென் றோதக் குளிர்ந்துள்ளங் - கொல்லே

றுடையானுக் கன்ப னுகந்திருந்தா சான்சொல்
லடைவேசென் றங்காசாற் காணா - துடையா

யொளித்தாயோ வென்றேங்கி யோராற்றாற்றேறி
குளிர்ச்சோலைக் கோவைக் குறுகி - வளத்தி

னுடனிருந்தான் கல்விபலர்க் கோதுவித்தான் பாவங்
கெடவிருந்தா னிங்கன் கிளர்நாள் - அடைவாக

மெய்யாத் துரைபுலமை வேதியன் மெய்ஞ் ஞானமிகும்
அய்யாத் துரைக்கன்ப னாயினான் - ஐயன்திம் 30

மப்பன் குருடிமலை யண்ணியுள னென்றன்னோன்
செப்பத் தெரிந்தங்குச் சென்றடைந்தான் - ஒப்பில்லா

ஆசாற்கண் டன்பா யடிபணிந்தா னாசானும்
பாசா டவிதொலைக்கும் பண்புரைத்தே - நேச

மனைவியொடு மேலாமில் வாழ்க்கை நடாத்தி
வினையறநில் லென்று விளம்ப - அனையதே

பாக்கியமென் றேத்திப் பணிந்துவிடை பெற்றதுபோல்
வாழ்க்கைபுரிந் தானல் மனையுடனே - ஆர்க்குஞ்

சுதைக்கடல் வெண்டிங்கள்தனைத் தோற்றுவித் தாலென்னத்
ததைத்தபுகழ்ச் சண்முகனைத் தந்தான் - இதத்தினான் 35

மிக்க மனையுமவை மெச்சுந் திருமகனுந்
தக்க புகழுந் தனக்கிருந்து - மொக்கத்

திருநீற்றி னுட்கிடந்துஞ் சேராக் கழல்போற்
கருதா தரனடிக்கே காதல் - பெருகி

யிருந்தா னவரு ரெரித்தார்க்கன் பர்சூழ்ந்
திருந்தா னவத்தை யிரித்தான் - வருந்தாது

மாயப் பிறவி யறுக்க வகைதந்தான்
றூயமா ணாக்கர்பலர்த் தொண்டுகொண்டான்-நேயத்தாற்

செம்பையம்பொ னாக்கிச் சிவனடியார்க் கீந்துவந்தா
னம்பனரு ணீற்றா னலிதீர்த்தான் - இம்பரார் 40

வேண்டினவெல் லாந்ததந்து வீற்றிருந்தான் காபாலங்
கீண்டுநட மாடுகழல் கிட்டினான் - யாண்டும்

வருமினைவு தீர்ப்பான் வளமார் தடாகத்
தருளுருவங் கொண்டங் கமர்ந்தான் - ஒருமுனிவன்

அன்னவன்றன் சேய்சண்மு கானந்த னெந்தமக்குத்
தன்னடிக்குத் தொண்டாந் தகைதந்தான் - மன்னுங்

குரவ ரிருவர் குருபூசை யாங்கள்
வருடந் தொறும்புரிவம் வந்துன் - னிருவிழியாற்

காணவெனச் சொன்னான்வேற் கந்தனடிக்கே வைத்த
ஆணவுரு நாரா யணகவுடன் - காணவெனச் 45

சென்றேன் றடாகந் திருமடத்தைச் சேர்ந்தவருட்
குன்றே யனையான்றன் கோவில்தனில் - வென்ற

புலனுடையா ரஞ்ஞானம் போக்கினார் ஞான
நலனுடைய நல்ல முனிவர் - கலவையுடன்

மாசாய்க் கழிந்திடுநம் மாதேவன் பூதியுயிர்
மாசா வனநீக்கு மாண்பாலும் - தேசிகத்தா

லாய பலவணிக ளங்கச் சுமையாகுந்
தூய விழிமணியைத் தொட்டாலும் - மாயவற்கு

மேலாம் பதந்தருநல் மேன்மையினா லுந்நீறு
மாலால முண்டோன்ற னக்கமு - மேலப் 50

புனைந்தார்கல் லாடையரைப் பொற்ப விசைத்தார்
மனந்தான் சிவனடிக்கே வைத்தார் - சினந்தால்

வனந்துழாய் மால்வளமும் வற்றுவிக்க வல்லார்
நினைத்தா லெனைத்துஞ்செய் நீரார் - அனைத்துஞ்

சிவமாகக் காணுஞ் சிறப்பினார் என்றுந்
தவமே கடனாக்கொள் சால்பார் - பவநெறியிற்

செல்லா திருப்பர் சிவன்புகழல் லாதொன்றுஞ்
சொல்லா திருப்பர்மிகத் தூய்மையார் - வெல்ல

வரிய புல னைந்து மவித்தார் குணமாம்
பெரியமலை மேனின்ற பெற்றியார் - பெரிய 55

சடைமுடி சூடிய தவராச ராவார்
புடையிருந் தன்போடு போற்றி - மிடையுங்

கரிசிரா வண்ணங் கடிகுருடி வெற்புந்
திரிசிரா வண்ணச் சிலம்பும் - துரிசிரா

தேகாஞ் சினதிக் கெனவறியா தோடச்செய்
மாகாஞ்சி காவேரி மாநதியும் - பாகார் சொற்

பங்குடையா ளோடும் பரனா டரசவைசேர்
கொங்குஞ்சோ ணாடுங் குலவிவளம் - பொங்கும்

தடாகமுஞ்செவ் வந்தித் தலமறை யோர்நா
விடாது பயில்வேத மாவும் - அடாத 60

பவஞான மாக்குதொழிற் பஞ்சமலஞ் சாடும்
சிவஞான வேழமுந் தேனு முவமிக்க

லாகாத வொண்சுவையோ டானந்தம் பொங்கவளர்
மாகாத லார்மொழிபா மாலையும் - போகாத

புன்பிறவி போக்கிப் புரந்தருள்வ னென்றருளாற்
சந்நிதியி னாட்டுஞ் சயக்கொடியு - மன்னி

முழங்குநவ நாத முரசுநல் லின்பம்
வழங்குதிரு வாணையும் வாழ்த்தித் - தழைந்தடிய

ருள்ளத்தி லூறுகின்ற வொள்ளமுதே யெஞ்ஞான்றுங்
கள்ளத்தார் காணாத காட்சியே - வெள்ள 65

மிருக்குஞ் சடையைமறைத் தென்பாரநீத்து
வரித்தோ லுடைநீத்து மற்றுந் - தரித்தென்று

முள்ளபல கோல மொளித்தோர் அருளுருவாய்க்
கள்ள மறுக்கவந்த கண்ணுதலே - வுள்ளக்

கறையை யகற்றவந்த கருணைப் பெருக்கே
மறைமுதலே தூய்மை மதியை - மறைவலஞ்

ஞான விருளகற்று ஞானமார்த் தாண்டனே
தானங் கனிகற்ப தாருவே - வூன

மகற்ற முளைத்த வருமருந்தே சற்சிற்
சுகப்பா றருங்காம தேனே - யகத்தில் 70

விழைவார் விழைந்தவெலாம் வேட்கையற வீயு
மழவெயிலார் சிந்தா மணியே - தழையும்

விலங்கு நுகர் புல்லு மெய்யன்பா லிட்டார்க்
கிலங்கும் பரமபத மீவாய் - பொலம்பூந்

திருவடியெஞ் சென்னிமிசைச் சூட்டியருளுந்
திருமுடியென் றேத்திச்சிரமேற் - கரமலர்கள்

சூடினார் நிற்பச் செரிந்து, தொழவேண்டி
நாடினே னானுமந் நாயகர்தம் - பீடுகெழும்

வெண்காப்புப் பூசி விளங்குந் திருநுதலும்
விண்காப்பான் விற்போன்ம் புருவமும் - தண்பூஞ்செந் 75

தாமரையே போலுந் தயையொழுகு கண்ணிணையுந்
தாமரையைத் தாங்குகையான் றன்புகழ்சேர் - காமருநீள்

காதம் பிறவிக் கடற்றோணி யாமொழியை
யோதுந் திருவாயு மொண்களமு - நாதன்செங்

கண்மணியுந் திக்குக் கவர்ந்தவுயர் தோளிணையுங்
கண்மணியுங் காப்புங் கலவையுங் - கண்மலரும்

பொற்ப விலங்கும் பொழின் மார்பும் போற்றுநர்க்குக்
கற்ப தருவாங் கரமலரும் - விற்பருதி

மாற்ற வியலா மனத்திருளை மாற்றியொளி
யேற்றும் பதத்தா மரையிணையு - நோற்ற 80

தவப்பயனாற் கண்டேனைத் தானு மடியேன்
பவப்பிணிகள் போமாறு பார்த்தா - னுவப்பாக

வன்னவன்றன் நோக்கா லடைந்தபே ரின்பத்தை
என்னுரையாற் சொல்ல வியலுமோ - பொன்மனமே

மற்றுமவ் வின்ப மருவும் விழைவினேன்
சற்றுநா ணாதிச்சை சாற்றுகேன் - மற்றவர்பாற்

சொன்னாற் செவிகொடார் துன்பந் துடைப்பவர்பா
லென்னாளுஞ் சொல்வ திவலுவென - முன்னோர்

உரைத்துள்ளா ராக வுறுதுணையா முன்னை
யிரக்கின்றேன் செய்தியெனு மெண்ணந் - துரப்ப 85

வெனக்கினிய நண்பாகு நீயிசையா யென்னிற்
பினைத்துணையார் செய்வர் பெரியோர் - நினைத்தவெலா

நின்னிசைவா லன்றோ நெடுநீர்ப் புவிமீதின்
மன்னும் புகழான் மருவினரால் - நின்முன்னர்

நின்னைப் புகழ்ந்துரைத்தல் நேரல்ல நம்மிருவர்
முன்னந் தனையாமே முன்னறிவோ - மன்னத்தைத்

தூதுசொலி யுய்ப்பேனேல் தூங்குஞ் சிறுநடைக்கே
போதுமிக வீணாகப் போக்காதோ - போதுணராக்

கிள்ளைதனை யுய்த்தாற்கிளத்தும் பொருடெரியாப்
பிள்ளைமதியாற்பல் பிதற்றாதோ - வெள்ளைநிற 90

நாரையுய்ப் பாமென்றால் நாயகர்க்கும் புன்புலவுச்
சூரையுணும் துட்டருக்குந் தூரமன்றோ - நீரைச்

சொரியுங் கருமேகஞ் சொல்லமுத மேகத்
தருகுநா ணாதுசெல லாமோ - தெரியுங்கால்

நெஞ்சேநின்றூதுக்கு நேரில்லை யென்வேட்கை
யெஞ்சா தவன்மு னெடுத்துரைக்க - விஞ்சுபே

ராற்ற லுனக்குளதா லாகையா லின்னேநீ
போற்றத் தகும்பெரியோன் பொன்னகரா - மேற்றமிகு

மாவிப் பதிசென்றெ ணாவிப்பதிபக்கன்
மேவிப் புதியநறு மென்மலர்கள் - தூவியவன் 95

பாதகமலம் பணிந்து பரவுமவர்
பாத கமலத்தைப் பாற்றுபெருஞ் - சோதியே

தாமரைக்கண் ணானுக்குஞ் சந்தச் சதுர்மறைச்செந்
தாமரைக்கண் ணானுக்குஞ் சார்வரிய - தாமரையோர்

அத்தத் தணிந்தே யணிபூம் பசுங்கொம்போ
ரத்தத் தணிந்தருளு மந்தணன் - றித்தித்

தருநிழற்கீழ் நால்வர்க்குத் தந்த மருந்தைத்
தருநிழல்சேர் கற்ப தருவே - பெருகுமருட்

சாகரமே சாந்தகு ணக்குன்றேச தானந்தப்
போகநில மேஞானப் பொக்கிஷமே - யேகனே 100

உன்றன் பெருமை யுரைக்கு மளவேயோ
வென்றே மிகவேத்தி யென்குறையை - யேகனே

செவ்வி யறிந்தேநீ செப்புவாய் திப்பியனே
யெவ்வம் பொறுக்க வியலாம - லிவ்வுலகில்

நின்னடிமைத் தொண்டிற்கு நேயம்வைத் தானொருவ
னென்னைநின் பாற்றூ திசைவித்தா - னன்னவன்றன்

செய்தி சிறிதே செவிசாய்த்துக் கேட்டருளி
யுய்தி யுதவுவது முன்கடன்காண் - துய்ய

விடையான் றிருநெறியே மேவும் விழைவா
னடையும் வகைமற் றறியா - னிடையிடையே 105

பொல்லாப் புலவேடர் பொய்ந்நெறியே சென்றுபொறி
யெல்லா மிழக்கு மியல்பினா - னல்லோர்

நடுவே பொலியு நசையான் மிகவுங்
கடையோ ருடனுங் கலந்தான் - கொடிய

கொலையுங் களியுங் குடியிருந்த துட்ட
வலகை யனையார்க்கு மாகாக் - கலகந்

தொடுத்துத் திரிவோர்க்குஞ் சோற்றுப் பொருட்டா
லடுத்துப் பணிசெய் தயர்ந்தான் - றொடுத்தமலர்

மானார் குழற்காட்டின் மையார் விழிவலையில்
நோனாமை யாற்சிக்கி நோன்மைகெழு - நானஞ்சேர் 110

கொங்கைக் கயக்கோட்டாற் குத்துண் டகலல்குல்
வெங்கட் செவியான் மிகக்கடியுண் - டங்க

மிகமெலிந்து நொந்தாம்பன் மெல்லிதழ்க் கள்ளுண்டு
தகவிழந்து காமச் சலதி - யகம்விழுந்தே

மூழ்கினான் றத்தளிக்கும் வேலை யுறுதுணையாச்
சூழ்தல்செய் தானுன் றுணையடியே - வாழ்கநின

தாரருளை யாவந்தே யன்பாற் கரைசேர்த்துத்
தாரகத்தைத் தந்தே சளந்தீர்த்துப் - பூரணமெய்ஞ்

ஞானத்தார் தம்முடைய நாப்ப ணிருத்தியவ
னூனத்தார் தம்மோ டுழலாதே - ஈனப் 115

புலன் வழியி னல்லறிவைப் போக்காதே ஞான
நலனடையப் போதநவின்றே - யலகில்பே

ரின்பவீ டெய்த விசைந்தே குருவாய்வந்
தன்பினோ டாட்கொ ளருணோக்கா - லென்றென்பே

ராவ லுரைத்தன்னோ னன்பார் விடைபெற்றே
யோவா வருளாலவ் வுத்தமன்றன் - கோவாரக்

கோலமிகு பூசைதனிற் கொண்டருளு முண்டகப்பூ
மாலையுநீ றும்வாங்கிவா 119

நெஞ்சுவிடு தூது முற்றிற்று

# குறிப்புரை

**எண் - கண்ணி எண்களைக் குறிக்கும்**

***கண்ணி 1-9 காவிரி நதிச் சிறப்பு***

**வேலாவலயம்** - கடல்; **சென்னி** - சோழன். **நேர்** - ஒப்பு. நிகர். **பொய்யை மலை** - பொய்யை அழிக்கின்ற; ***சீலம்*** - ஒழுக்கம். **பொதிகை முனி** - அகத்தியர். **தகம்** - உஷ்ணம். **குயம்** - அரிவாள். குய்யம் அலை சாந்து - அரிவாள் வெட்டுக்கு அகப்படா சேகு ஏறிய சந்தனமரம். **அகர்** - அகில். **காந்தும்** - ஒளிவிடும்.

6. இன முல்லை மலர் ஆனைந்து முகந்து கொண்டு அலையாகிய கையால் ஆட்டி எல்லையிலா நல்ல தலங்கள் தோறும் சென்று வழிபட்டு

7. **அல்** - இருள். **களம்** - கண்டம்

9. **சேண் நாடு** - சேய்மையில் உள்ள நாடு. தேவலோகம்.

*10-11.* *திருமுடி சுவாமிகள் அவதரித்த திருச்சிராப்பள்ளியின் சிறப்பு*. **அராப் பள்ளியான்** - பாம்பணையனாகிய திருவரங்கன்.

*14.* திருமுடி பெயர்க் காரணம் கூறப்பட்டது. **திருவடி** - ஞானம். திருவடிஞானத்தைச் சுமக்கும் பேற்றினால் திருமுடியாயிற்று.

*16.* **துங்கப்பா** - உயர்ந்த பாடல்கள்.

*17.* **நேமம்** - நியமம். ஒழுக்கம். குடியைக் கெடுக்கும் காமம் முதலி தீக்குணங்களைக் கடிந்து தவிர்ந்தான்

*18.* **பெட்பே உற** - விருப்பத்தை அடைய

*19.* **பிறவிக் கடலைக் கடத்த துறவியாம் தோணி** - சற்குரவன்

20. **அல்லமன்** - பிரபுலிங்க லீலை எனும் வீரசைவக் காப்பியத் தலைவன். சிவனே அல்லமப்பிரபுவாக வந்தார்.

22. **ஆதுலன்** - தரித்திரன்

25. **தென்கயிலைக் குன்று** - வெள்ளியங்கிரி

27. **உகந்திருந்து ஆசான்சொல் அடைவே சேன்று** - மகிழ்ச்சியுடன் ஆசான் சொன்னவாறே சென்று

29-30. கோவையில் திருமுடி சுவாமிகள் வாழ்க்கை.

37. காலில் இருந்தும் காலொடு ஒட்டாக் கழல்

38. **தானவர் ஊர் எரித்தார்க்கு** - தானவர் - முப்புரத்து அசுரர். **அவத்தை இரிந்தான்** - துன்பத்தை நீக்கினான்.

35-40. திருமுடி சுவாமிகள் இல்லறத்திருந்தும் துறவு மேற்கொளல்

40. **நலி** - வருத்தும் நோய்.

41. **கபாலங் கீண்டு** - கபாலத்தைப் பிளந்து.

42. தடாகத்தில் சமாதிகொளல். **அருளுருவம்** - இலிங்கத் திருமேனி.

44. திருமுடிசுவாமிகள், அவருடைய திருக்குமாரர் சண்முகானந்தசுவாமி இருவர் சமாதிகளும் ஓரிடத்தே அமைந்துள்ளன.

45. நாராயண கவுடர் சொல்லத் தடாகம் செல்லல்.

50. ஆலாலம் உண்டான் அக்கம் - உருத்திராக்கம்

46-56. திருமுடிசுவாமிகளின் திருமடத்தில் இருந்த அடியவர்களின் மாண்புகள்.

56. மிடையும் - வருத்தும். கரிசு - குற்றம், ஆணவ மலம்.

57. இராவண்ணம் - இல்லாதொழியுமாறு, திரிசிரா வண்ணச் சிலம்பு - அழகிய திரிசிராமலை.

58. துரிசு இராதே காஞ்சு இ(ன்)ன திக்கு என அறியாது ஓடச் செய் பெரிய காஞ்சிமாநதியும்.

59. அரசவை - அரசம்பலம் காஞ்சிபாயும் கொங்கும்; காவிரி பாயும் கோணாடும்

57-64. திருத்தசாங்கம்

குருடிமலையும், திரிசிராமலையும் - வெற்பு, காஞ்சி மாநதி காவேரி மாநாடு - நாடு. கொங்கு நாடும் சோணாடும் - நாடு. தடாகமும் செவ்வந்தி நகரும் (திருச்சிராப்பள்ளி) - நகர். வேதமா - குதிரை. சிவஞான வேழம் - யானை, காதலார் பா மாலை - மொழி. சந்திதியில் நாட்டும் சயக்கொடி - கொடி. முழங்கு நவநாத முரசு. இன்பம் வழங்கும் திருவாணை - ஆணை.

64-74. திருமுடிசுவாமிகள் திருமடத்தில் அடியார்கள் தொழுது நிற்றலைக் கண்டு ஆசிரியர் தாமும் தொழ விழைதல்.

65-68. சிவம் மானுட உருத்தாங்கி இருத்தல்.

69. ஞானமார்த்தாண்டன் - ஞான சூரியன்.

70. சுகப் பால் தரும் காமதேனு.

77. பிறவிக் கடற்றோணியாம் மொழி - தீக்கை மந்திரம்.

81. நயனதீக்கை.

87. நெஞ்சின் சிறப்பு.

88-92. அன்னம், கிள்ளை, நாரை, மேகம் இவைகள் தூது செல்லத் தகுதியின்மை

95-101. பாட்டுடைத் தலைவனைத் துதித்தல்.

95. ஆவிப்பதி - தடாகம். ஆவிப்பதி - உயிர்த்தலைவன்.

96. பாத கமலம், பாதக மலம்.

97. தாமரை போன்ற கண்ணையுடையவன், தாமரையில் இருப்பவன். பிரமன்.

98. அத்தம் - கரம். அத்தம் அர்த்தம், பாதி.

101-119. தூது மொழி.

# கவியரசு அவர்களால் இயற்றப்பட்டுள்ள பிற நூல்கள்

1. யாரே அழகுக்கு அழகு செய்வார் - குறுங்காப்பியம்

**மொழிபெயர்ப்பு நூல்கள் :**

1. ஆதிசங்கரின் திருச்செந்தூர் சுப்பிரமணிய புஜங்கம்
2. சிவானந்தலகரி
3. சிவகேசாதி பாதாந்த வருணனத் தோத்திரம்
4. சிவபாதாதி கேசாந்தவருணனத் தோத்திரம்
5. தட்சிணாமூர்த்தி தோத்திரம்
6. அப்பைய தீட்சிதரின் ஆன்மார்ப்பணத்துதி
7. நீலகண்ட தீட்சிதரின் இன்பமாகடலெனும் ஆனந்த சாகரஸ்தவம்
8. தச ஸ்லோகி
9. மூககவியின் மூகபஞ்ச சதி
10. புட்பதந்தரின் சிவமகிம்ந ஸ்தோத்திரம்

**இசைப்பாடல்கள் : பல**

**உரைகள் :**

1. இரட்டைப் புலவர்களின் திருவாமாத்தூர்க் கலம்பகம்
2. சேக்கிழார்ப் பிள்ளைத்தமிழ்
3. திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்
4. திருச்சிலம்பொலி - திருவெம்பாவை உரை

**உரைநடை நூல்கள் :**

1. அப்பர்வரலாற்றாராய்ச்சியும் தேவாரத்திறனாய்வும்
2. நியாயக் களஞ்சியம்

